# கம்ப நாடகம்

## அயோத்தியா காண்டம்

# பங்கம் இல் பரதன்



செ. முத்துக்குமரன்

புவனம் பதிப்பகம்
18, சின்னப்ப ராவுத்தர் தெரு
திருவல்லிக்கேணி, சென்னை-600 005

கம்ப நாடகம்

அயோத்தியா காண்டம்

# பங்கம் இல பரதன்

செ. முத்துக்குமரன்

புவனம் பதிப்பகம்
18, சின்னப்ப ராவுத்தர் தெரு
திருவல்லிக்கேணி, சென்னை-600 005

முதற் பதிப்பு : ஏப்ரல், 1989

இந்நூலின் இந்தப் பதிப்பு திருமலை-திருப்பதி தேவஸ்தான பொருளுதவியுடன் வெளியிடப்படுகிறது

இது ஒரு புவனம் பதிப்பக வெளியீடு

கம்பராமாயணம்

நாடக வடிவம்

அயோத்தியா காண்டம்



விலை ரூ. 10

அச்சிட்டோரும்
அட்டை வண்ணமும் :
அருள்வேல் அச்சகம்
பழவந்தாங்கல்; சென்னை-600 114
தொ. பே. எண் : P. P. 432854

நூல் கிடைக்குமிடம்;
ஐந்திணைப் பதிப்பகம்
279, பாரதி சாலை
திருவல்லிக்கேணி
சென்னை-5
தொ. பே. 845712

# முன்னுரை

கம்பன் வான்மீகியைப் போல ஆறு காண்டங்கள் படைத்தான். இராமாயணம் முழுமைக்கும் இராமன் காவியத் தலைவன் ஆகிறான். காண்டங்களின் அமைப்பு முறையை அணுகிப் பார்த்தால் ஒவ்வொரு காண்டத்திற்குள்ளும் ஒரு தலைவன் ஒளிந்திருந்து வெளிப்படுகிறான்.

பால காண்டத்தில் இராமன் பாலனாக, சீதையை மணம் கொள்ளும் இளைஞனாக, தாடகையை வதம் செய்து அகலிகையை உய்ப்பிக்கும் வள்ளலாக அமைவதைத் துனி உறு முனிவனாய விசுவாமித்திரன் வெளிப்படுத்துவதால் பின்னவன் தலைவன் ஆகிறான்.

‘நின் கரிய செம்மல் ஒருவனைத் தருதி’ என்று கேட்டுச் சீதையை இராமனுக்குத் திருமணம் செய்து வைக்கும் வரை விசுவாமித்திரனே வெளிச்ச உலா செய்கிறான்.

அயோத்தியா காண்டத்தில் இராமனுக்குரிய ஆட்சியை அளித்ததும், பரதன் அதனை வேண்டாம், என்று விலக்கி, ஆயிரம் இராமரை விஞ்சியவனாகிறான். கேகயத்தினின்று மீண்ட பரதன் தாயை ஏசிக் கோசலையிடம் சூள் உரைத்து, அண்ணலின் அடிச் சுவட்டைப் பின்பற்றி அவ்வண்ணலின் திருவடி சூட்டிக் கொள்ளும் வரை பண்பிலும், பணிவிலும் உயர்ந்து பங்கம் இல் பரதனாக விளங்குகிறான். ஆகவே, பரதனே அயோத்தியா காண்டத்தின் தலைவன் ஆகிறான்.

கம்பர் இக்காண்டத்தில் நயத்தகு நாடகக் காட்சிகளை வடித்து இருக்கிறார். மந்தரை மருகி நடக்கையிலேயே நாடகம் தொடங்கு கிறது. கைகேயி வீழ்ந்ததும், தசரதனைக் கைகேயி வீழ்த்தியதும் திருப்புமுனை இல்லாத நாடகக் காட்சிகள். இலக்குவனின் சீற்றமிகு ஏற்றமும், இராமனின் பதில் உரையும் சுவையான நாடக வரிகள். குகனும், பரதனும் குலாவும் காட்சி நெஞ்சைக் கொஞ்ச வைப்பதாகும். இலக்குவன் இரண்டாம் முறை சித்திர கூட மலையேறிச் சீற்றம் காட்டுகையில் பரதன் பார்வையில் படுவது உள்ளத்தை உருக்கும் ஒப்பற்ற காட்சி.

இவ்வாறு தந்தை தந்த நாட்டைத் தமயனுக்கு ஈயமுனைந்து, தவத்தில் நனைந்த பரதனை பங்கம் இல்லாத பண்பாளனாய்ப் பார்த்து மகிழ்கின்றோம்.

கம்பரது பாடல்களைக் கொண்டு நாடக முறை பிறழா வண்ணம் இதனை அமைக்க முயன்றிருக்கிறேன். இப்பகுதி உருப்பெற தென்கச்சி திரு கோ. சுவாமிநாதனும், திரு பம்மல் மணிமொழியும் உறுதுணை புரிந்தனர். ஏ. ஜே. எஸ். நிதி மேல்நிலைப் பள்ளியின் முன்னாள் தலைமை ஆசிரியர், 'நல்லாசிரியர்', நயம் நிறைந்த நண்பர் திரு. துரை. இராமு அவர்கள் தந்த ஊக்கத்தினாலேயே இந்த நூல் உங்கள் கைகளில் தவழ்கின்றது. அருள்வேல் அச்சகத்தாருக்கு என் அன்புகலந்த நன்றி, கம்பனில் கருத்தைப் பதி கொடுத்த தமிழ் நெஞ்சங்களுக்கு இந்நூலைப் படைக்கிறோம்.

— கோ. செல்வம்



# பங்கம் இல் பரதன்

## நாடகக் கதை

தயரதன் மன மகிழ்ச்சியோடு அரண்மனை புகுந்தான். ஆனால், அவன் உள்ளத்துள் ஓர் அவா உறங்கிக் கிடந்தது.

அவையில் வசிட்ட முனிவரைப் பணிந்து அமர்ந்தான். ஏனைய அரசரை நோக்கி, "மனு முதலாக வந்த இவ்வரசை முறை திறம்பாது அறுபதாண்டுகள் ஆண்டேன்; வாழ்க்கை நிலையற்றது. இராமன் என் நோயினை நீக்குபவன். அவன் சீதையை மணந்தான். இராமனிடம் இவ்வரசாட்சியை விட்டு, பேதமையால் வரும் பிறவியை நீக்க மாதவம் புரிய எண்ணுகிறேன், இராமன் சீதையை மணந்தது போலே நிலமகளையும், அவன் மணக்க வேண்டும். யான் வனத்தை அடைவேன். உங்கள் கருத்து என்ன?" என்றான்.

வசிட்ட முனிவர் தயரதனை நோக்கி, "அரசே! உன் குல மன்னர்களில் சிறந்த இராமனைப் போன்ற மைந்தரை யார் பெற்றார்? பருமை யார் உற்றார்? நீர் எண்ணியது தக்கதே. இதுவே தர்மம். இராமனைக் கற்றவரும், மற்றவரும் விரும்புவர். நீ அரசாட்சியை அவனிடம் ஒப்புவித்து விட்டுத் தவம் செய்ய எண்ணுதல் சிறந்ததே!" என்றார். தயரதன் மகிழ்ந்தான்.

அவரது திருவடிகளை வணங்கினான். இது கண்ட சுமந்திரன் மந்திரக் கிழவர் கருத்தை ஏற்று. "அரசே! இராமன் அரசு பெறுவான், என்பதால் ஏற்பட்ட மகிழ்ச்சியைத் தாங்கள் துறவு பூண முடிவு செய்ததானது சுடுகின்றது. முறையாக இராமனுக்கு முடிசூட்டுவித்து மற்றதைச் செய்வீராக!" என்றான்.

நன்றே சொன்ன சுமந்திரனிடம் இராமனை அழைத்து வருமாறு தயரதன் ஏவினான். இராமன் வந்தான்.

தயரதன், "ஐய! இராம, மூப்பு வந்தது. மாநிலச் சுமையை ஏற்றுக் கொள். நான் எனது சுமையிலிருந்து விடுபட்டு வீடு பேறடைய நீ உதவ வேண்டும். நம் முன்னோர், தம் மக்களிடமே அரசை முறையாகத் தந்துள்ளனர். பெருமை மிக்க அரசாட்சியாகிய அறத்தை ஏற்றுப் புரப்பாயாக!" என்றான்.

இராமன், அதைக் கடனாக ஏற்றான். தயரதன், இராமனை மார்புற அணைத்து, ஏனைய அரசர்க்குத் தம் மகிழ்ச்சியைத் தெரிவிக்க, சுற்றி இருந்த மன்னரும் மகிழ்ந்தனர், தயரதன் உரை தரு கணி தரை நோக்கி, உற்ற நாள் கேட்க, "பொருந்து நாள் மறு நாளே !" என்றனன். வசிட்டர் வாழ்த்தினர். தயரதன் முரசறைந்து செய்தியை முழங்கச் சொன்னான்.

நான்கு மங்கையர் நல்ல இச் செய்தியைக் கேட்டுத் திறம் கொள் கோசலையை அணுகித், தேன் அனைய இத் தகவல் கூறினர் கோசலை மகிழ்ந்தாள். கூடவே மன்னவன் துறவறம் மேற்கொள்வானோ, என்று அஞ்சும் போது அவளது மகிழ்ச்சி குறைந்தது. சுமித்திரையும் இச்சேதி அறிந்தாள். யாவரும் திருமாலின் கோவில் சென்று வணங்கினர்

வசிட்டர் இராமனை அழைத்து, அரசர்க்கு உரிய உறுதி மொழிகளை உரைத்தார் "அந்தணரை அன்போடு பேணுக ! மன்னர்க்கு அறமும், நடுநிலைமையும் இன்றியமையாதன. சூது முதலிய குற்றங்கள் உன்பால் இல்லை, எனினும் அவை தீயவை என்பதை அறிவாய். பிறரோடு மாறுபாடு இல்லை, என்றால் போரில்லை. புகழே மிகும். நாள் தோறும் வருவாயைப் பெருக்குக. ஐம்புலன்களை அறிவோடு அடக்குக. நடுவு நிலையோடு நின்றிடுக மன உறுதி கொள்க.

"மும்மூர்த்திகளை நிகர்த்தவர்க்கும் அமைச்சர்களின் அறிவுரையே வலிவைத்தரும். அன்பும் அருளும் அரசர்க்கு ஆக்கம் தருவன. இன்சொல்லும், ஈகையும் எண்ணிச் செயல்படும் ஆற்றலும், என்றும் உன்பால் நிலைப்பதாகுக. இது பெற்றார்க்குக் கேடு இல்லை. மங்கையர்பால் கொள்ளும் காமம் மாண்பைக் கெடுக்கும்" என்றார். இருவரும் திருமால் கோயில் சென்றனர். இராமன் நன்னீர் ஆடினான். மறுநாள், முடி அணி திருநாள்.



கைகேயியின் தோழி கூனி இராமன் திருமுடி சூடும் செய்தி கேட்டுக்குமுறினாள். இராமன் தன் விளையாட்டுப் பருவத்தில் அவள் கூன் மீது மண் உருண்டையை அடித்ததை எண்ணிப் பகைமை

பாராட்டிப் பொங்கினாள். மடிந்த வாயோடு நடந்தாள். தூங்கிக் கொண்டிருந்த கைகேயியைப் பாம்புபோல் தீண்டினாள்.

அவளை நோக்கி "உனக்குப் பேரின்னல் வந்தது, இராகு உம் திங்கள் முகத்தைக் கவ்வியது. ஆயினும் அந்த முக ஒளியோடு நீ தூங்குகிறாயே ?" என்றாள். கைகேயி, "பகைவெல்லும் பண்பான மைந்தர் நால்வர் நலமாக இருக்க, எனக்கு என்ன துன்பம் வரும் ? வேதம் போன்ற இராமனைப் பயந்த எற்கு இடர் உண்டோ ?" என்றாள்.

கூனி கூறினாள் : "வாழ்ந்தனள், கோசலை; வீழ்ந்தது, நின் நலம் !" என, அதற்குக் கைகேயி, "மன்னர்க்கு மன்னனைக் கணவனாய்ப் பெற்றேன். பரதனை மகனாய்க் கோசலை பெற்றாள் இதனினும் மேலான வாழ்வு எது ?" என்று கேட்க, கூனி விடாது, "ஆண்கள் நகைத்திட, ஆண்மை மாசுபெறத் தாடகையைக் கொன்ற இராமன் நாளை முடிசூடுவன். கோசலைக்கு இதுவே வாழ்வு" என்றாள்.

கைகேயி அவளுக்கு மாலையைப் பரிசாகத் தந்து, "நான் உவந்தேன் !" என்றாள்.

கூனி மாலையை வீசி எறிந்து, "நீ அறிவற்றவள். நீ வேறு, கோசலை வேறு, என்பதை உணர்க. பரதனோடு நீயும் பெருந்துயர் பெறுக. உன் மாற்றாளான கோசலைக்கு நீ அடிமையாவாய், அதைப் பொறுக்க மாட்டேன். இராமன் முடி ஏற்பான் பரதன் பாக்யம் பெறவில்லை ; வறியன் ஆனான். ஐயோ, அவன் இறந்திலனே ; நல்ல பெருமையோடு வாழவும் முடிய இல்லையே ! தயரதன் கொடியன் நீயும் தீயள் ஐயோ பரதா ! நீ என் செய்வாய் ? பரதன் கல்வியோடு இளமையும், கணக்கற்ற ஆற்றலும், தில் வினையும், அழகும் வீரமும் பெற்றிருந்தும் புல்வெளியில் சிந்திய அமிர்தம் போல் போனானே" என்று புலம்பினாள்.

கைகேயி சினந்தாள் ; "தீயவளே ! இச் சூரிய குலத்தோர் நீதி தவறாதவர்கள். உன் இழிந்த சிந்தை கேகயர் குலத்திற்கும், மனுவின் குலத்திற்கும் குற்றம் செய்தது. நீ எனக்கு நல்லவள் அல்லை. ஊழ்வினையால் உளறுகிறாய். உலகில் பெற வேண்டியது

புகழே. அந்தப் புகழைப் பெற எது போவதாயினும் குல முறையினின்று தவறக் கூடாது. பொல்லாது பேசிய உன் நாவைச் சேதியாது விட்டேன் அடங்கு,'' என்றாள்.

மந்தரை அவள் அடி வீழ்ந்தாள். ''உனக்கு நன்மை தருவன வற்றை உரைத்தே போவேன். இராமன் அரசு புரிவானெனில் உலகமே கோசலைக்கு உடைமையாகும். உனக்கும் உன் மகன் பரதனுக்கும் அவளாகப் பார்த்துக் கொடுத்தால் உண்டு. உன்னை அடைந்து இரப்பவர்களுக்கு நீ என்ன தருவாய் ? அதற்காகக் கோசலையிடம் சென்று இரப்பாயோ? தர நம்மிடம் ஒன்றுமில்லையே? என வெட்கப் படுவாயா ? இல்லை, வருந்திச் சாவாயா ? இராமன் மன்னவன் ஆகி உன் தந்தையை வெல்வான். இராமன் அரசனானால் அவனுக்குப் பின் அவன் மரபுளோரே ஆள்வர். பரதன் ஆள முடியுமா ?'' என்று கூறி முடித்தாள்.

தீய மந்தரை தீயினும் தீயவை கூறத் தூய கைகேயி மனம் மாறினாள். கூனியிடம் பரதன் முடிபுனைய வழி கேட்டாள். கூனி முன்னர் சம்பராசரனுடன் போர் நடந்தபோது, தயரதன் தந்து இவள் பெறாத இருவரங்களை நினைவு செய்தாள். ஒரு வரத்தால் பரதன் ஆளவும் மற்றொன்றால் இராமன் பதினான்கு ஆண்டுகள் கானகம் ஏகவும் கேட்கச் செய்தாள்.

கைகேயி முற்றிலும் மனம் மாறினாள். மந்தரையை அனுப்பி வைத்தாள். குழலில் சூடி இருந்த மலர்ச் சரத்தைப் பிய்த்துச் சிதைத்தாள். மேகலையைப் பற்றி வீசிச் சிதறினாள், அலங் கோலத்தோடு அழுதபடி தரையில் விழுந்தாள்.

நள்ளிரவில் தயரதன் கைகேயியை நாடி வந்தான். அவளை அணுகி, ''என்ன நடந்தது ? உன்னை இகழ்ந்தவர் மாள்வர் உற்றது உரைத்திடு'', என்றான். அவள், 'என் மீது அருள் இருப்பின் அந்த இரண்டு வரங்களை இப்போதே தருக ! ' என்றாள்.

தயரதன், ''இராமன் மீது ஆணை தந்தேன் !'' என்றான். தீயளாய் மாறிய கைகேயி, மந்தரை சொல்படி இரண்டு வரங்களையும் இயம்பிடத் தயரதன் கலங்கி, ''கொடியோய் !'' என்று கூறி அழுதான்.

## VII

"இராமனை இது காறும் பெற்ற மகனாய்க் கருதி இருந்தாயே! நஞ்சனைய போதனையால் உன் நெஞ்சம் கெடுத்தார் யார்?" என்று கேட்டான். அதற்கு அவள், "யாரும் எனக்குப் போதிக்க வில்லை. முன்பு தருவதால் மொழிந்த இரு வரங்களைத் தருக. இன்றேல் நான் மாள்வேன். பழி உன் மீது நிலைக்கும்" என்றாள்.

மன்னவன் அவள்அடி வீழ்ந்தான்: கெஞ்சினான். அவள் மிஞ்சினாள். தயரதன் "நீ கேட்ட வரம் தந்தேன். இராமன் காடாள்வான். நான் இறந்து வானுலகு ஏகி, அதனை ஆள்வேன். நீ பழி உறுக!' என்று கூறி மயங்கி வீழ்ந்தான்.

கைகேயி இராமனை அழைத்து வரச் செய்து, அவனிடம், "மன்னவன் பணித்தான். நீ பதினான்கு ஆண்டுகள் காடு ஆள்க. பரதன் நாடு ஆள்வான்", என்ன இராமனும் அவள் இணை அடி வணங்கி, தயரதன் பக்கம் திரும்பி, அவன் பாதம் நோக்கி வணங்கிப் புறப்பட்டான்.



இராமன் வருவதைக் கோசலை கண்ணுற்றுத் திடுக்குற்றாள். முடி புனைவதற்குரிய அடையாளம் இன்றி, இழைக்கின்ற விதி முன் செல்லத் தருமம் பின் இரங்கி ஏகத் தன் மகன் வருவதைக் கண்டு அவனை நோக்கி, "முடி சூடுவதற்கு இடையூறு உண்டோ?" என, அவனும் "உன், அன்பு மகன், பங்கம் இல் குணத்து எம் தம்பி பரதன் பார் ஆள்வான்" என்றான்.

கோசலை, "முன்னவன் இருக்கப் பின்னவனுக்கு முடி சூடல் முறை அன்று, என்றாலும், பரதன் நிறை குணத்தவன் நின்னினும் நல்லன் அவனுக்கு நானிலம் தந்து வாழ்க!" என்றாள்.

அப்போது இராமன், தன் தந்தையின் இரண்டாம் ஆணையை இயம்பிடக் கோசலை அழுதாள்; விழுந்தாள்; விம்மி அரற்றினாள். இராமன் ஏற்ற ஆறுதல் மொழிகளை எடுத்து உரைத்தான். அவனோடு கானகம் புறப்பட முனைந்த அவளைத் தந்தைக்கு உறுதுணையாக இருக்கும்படி கூறினான்.

கோசலை ஆறுதல் பெற்றாள் இல்லை; இராமன், "அன்னையே! பதினான்கு ஆண்டுகளையும், பதினான்கு நாட்களாய்

கழித்து மீள்வேன். தவமே மேன்மை. முன்பு கோசிக முனிவரால் குற்றம் அற்ற வித்தைகள் கற்றேன். அவர் அருளால் சீதையை மணந்தேன். இப்போது காடு ஏகி, முனிவர்களோடு வாழ்ந்து தொண்டு செய்து நன்மைகள் பெற்று மீள்வேன். பரசுராமனும் தன் தந்தையின் சொல்லை ஏற்று பெற்ற தாயையே கொன்றான். நான் தந்தையின் சொல்லை மறுத்தல் நலமா ? என்றான்.



கோசலை, ஆறுதல் பெறாது, தயரதனிடம் சென்று, பரதன் நாடாளினும் இராமன் காடு ஏகாதிருக்க, வரம் கேட்டிடக் கைகேயியின் அரண்மனை சேர்ந்தாள். வசிட்டரும் ஆங்கு வந்து, கைகேயியைக் கண்டு, அறிவுரை கூற, அவள் அதை ஏற்றிலள். வசிட்டர் மயங்கிக் கிடந்த தயரதனை எழுப்பினார். தயரதன் கைகேயியைக் கண்டு பொங்கி ஏசு மொழி பேசினான். இது கண்ட கோசலை மாற்றாள் மனத்து வஞ்சத்தாலேயே இராமனுக்கு இடர் வந்தது என்று அறிந்தாள். தயரதன் புலம்பினான்

மீண்டும் கைகேயியை நோக்கி, "உன்னை எமன் என்று எண்ணாமல் பெண் என்று கொண்டு, பெண்டாட்டி ஆக்கினேனே ! உன் கழுத்தில் உள்ள மங்கல நாண் பரதனுக்கு முடிசூட்டுக் காப்பு நாணாகும்" என்று முனிந்து மொழிந்தான்.

வசிட்டரை நோக்கித் தயரதன், "இக்கொடியள் எனக்கு மனைவியில்லை. வெறுத்தேன் ; இவளைப்பெற்ற பரதன் என் மகன் என்று எண்ணேன். ஈமக்கடன் இயற்ற உரிமையும் ஈகேன்," என்றனன். கோசலை, தயரதனுக்கு ஆறுதல் கூறினாள். தயரதன் அவளது கூற்றை நம்பாது வருந்திப் புலம்பினான்.

முன்பொரு கால், சுரோசனன் என்பானைக் கொன்றதால், அவனது பார்வையற்ற தந்தையான சலபோசனன் தந்த வரத்தால் இராமனது பிரிவுச் சாபம் ஏற்பட்டது என்ற செய்தியைக் கோசலைக்குத் தயரதன் கூறினான்.



இத்துயரச் செய்தி கேட்ட மன்னரும், மக்களும் முனிவரும் வருந்தி நொந்தனர் இலக்குவன் செவியில் இச் செய்தி எட்டிட

அவன் ஏற்றினான், வில்லினை; ஏற்றினான் குரலையும்! "வரத்தினால், சிற்றன்னை பரதனுக்கு நாட்டையும், இராமனுக்குக் காட்டையும் தந்திருக்கிறாள். சிங்கக்குட்டிக்கு இடும் ஊனை நாய்க் குட்டிக்கு நல்குவது நங்கையின் அறிவின் திறமோ? நன்றாய் இருக்கிறது! எவர் வரினும் அவரைப் போரில் கொன்று குவிப்பேன்; விண்ணவர், மன்னவர், விஞ்சையர் எவரேனும் வருக. ஒரு பெண்ணின் நாட்டத்தைச் செயற்படுத்த விரும்பேன், என் தமயனுக்கு முடி சூட்டுவேன்,'' என்று உறுமினான்.

இராமன் எதிர்ந்து வந்து, "என்றும் சினவாதவனே! இன்று பெரும் சினம் கொண்டு, போர்க் கொடி உயர்த்தக் காரணம் என்ன?'' என்றான்.

இலக்குவன் இப்போதும் சீறினான் "உனக்கு முடி சூட்டுவேன், என்ற மன்னவனின் மெய்யுரையைச் சிதைவித்த இருள் மனக் கைகேயிக்கு எதிராக நிற்பேன்; உனக்கு முடிசூட்டுவேன்; தடை செய்பவர் தேவராயினும் தீயினால் சுடுவேன்; அதற்குத் துணிந்தேன். எனை எதிர்வார் யாவராயினும் வெல்வேன்; ஈரேழ் உலகினையும் உனக்குக் கொள்வாயாக!'' என்றான்.

இலக்குவனின், இயல்பு மாறி இருப்பது கண்ட இராமன் வியந்து, சொன்னான். "உன் அறிவு நீதி பிறழா நெறி செல்லுமே; அவ்வாறிருக்க அறம்கேடுற நெறி மாறிட என்னாயிற்று?'' என்றான்.

இன்னமும் மனம் ஆறாத இளையவன், "அரசை உனக்கு அளிப்பதாய் அறிவித்து, அடுத்து கானகம் செல் என்று சொன்னால் இப்போது எனக்குச் சினம் வராமல் எப்போது அது வரும்? முன்னது மொழிந்ததை பின்னர் பொய்யாக்கிய மன்னவன் தயரதன் வாளாய் இருப்பது போல் நான் பொறுத்திருப்பேனோ?''என்றான்.

இது கேட்ட இராமன், "தந்தையின் சொல்லைத் தட்டாமல் ஏற்றது என் பிழையது. மன்னரின் குற்றம் யாது? என்றான்.

"நீர் ஓடாமல் இருந்தால் அது நதியின் குற்றம் ஆகாது அரசனின் பிழையும் அன்று. சிற்றன்னையின் அறிவுப் பிழையும் அன்று. விதியின் பிழையே இதற்கு ஏன் வெகுண்டாய்?'' என்றான்.

இலக்குவன் இன்னமும் அடங்கவில்லை விதிக்கும் விதியாக இருந்து விளங்கும் என் வில் தொழில் காண்க ' என்று விளம்பினான்

"மறை பேசும் நாவினால் இவ்வாறு பேசுவது நல்லொழுக்கம் ஆமோ ? தாய் தந்தையர் தவறு செய்யின் அவர் மீது பழிக்க-லாமோ ?" என இராமன் வினவினான்.

இலக்குவனோ இன்னமும் தளராமல், "என் தாயும், தந்தையும் தலைவனும் நீயே! பிறரில்லை," என்று உரைத்திட, இராமன் இலக்குவனை நோக்கி, "வரம் பெற்ற சிற்றன்னையே அரசு பெறும் உரிமையள்: அவள் கூறி ஐயன் அளித்த அரசைப் பரதன் கைக் கொள்வான். நான் பெறும் தவமும், அறனும் உயரிய செல்வம் நன்னெறியில் நடைபோடும் தம்பி பரதனைப் போரிட்டு வென்றா நான் முடிசூடுவது? உன் சினம் அவனை வென்றா தாயை வென்றா, அல்லது தந்தையை வென்றா தணியப் போகிறது?" என்று கேட்டதும் இலக்குவன் இளகினான்.

' பகைவர் சொல்லையும், வலிவான இருதோள்களையும், கட்டமைந்த வில்லையும், வீணாய்ச் சுமக்கின்றேன். யான் சினந்து என்ன பயன்?" என்று தன்னைத் தானே நொந்து கொண்டான் இராமனும் ஆறுதல் கூற இளையவன் சீற்றம் துறந்தான்.



சுமித்திரை துயருற்றாள். இலக்குவனை நோக்கி அவள் இராமனோடு கானகம் ஏகப் பணித்தாள். இராமன் அதனைத் தடுக்க முனைந்தான். இலக்குவன் துயருற்று, உனக்கு நான் என்ன பிழை செய்தேன்? குளத்தில் நீர் இருந்தால் தான் மீனும் நீளப் போகும்; நானும் சீதையும் ஆர் உளர் எனின் உளேன்?" என்று வினவி இராமன் உணர்ச்சி வயப்பட்டு ஒன்றும் பேசாதிருந்து, இலககுவனின் முகம் நோக்கிக் கண்ணீர் பெருக்கினான்.

இராம இலக்குவர் மரஉரி பூண்டு இருக்கக் கண்ட வசிட்டர் துயருற்றார். "மங்கல விழாக்கான குறிப்பிட்ட அந்த நாளே மர உரியை அணியச்செய்ததே! நான்முகன் ஒரு வினையை ஆய்ந்து செய்தாலும் தொடரவல்ல ஊழை யாரால் போக்க முடியும்?" என்று எண்ணினான்.



சீதையிடம் விடைபெற இராமன் சென்றான். கணவன் மரவுரி உடுத்தி வருவதைக் கண்ட சீதை துணுக்குற்றாள்; அகம் கலங்கினாள்; அழுதாள். "மன்னருக்கு ஏதேனும் கேடு வந்ததோ?" என வினவினாள்.

இராமன், "ஒப்பற்ற தம்பி அரசாள தாய் தந்தை சொற்படி காடு செல்வேன். நீ இங்கு வருந்தாது இரு," என்று கூறினான். இது கேட்ட சீதை நாடு போனதற்கும் காடு போவதற்கும் வருந்தாது தன்னை விட்டுச் செல்வதாய்க் கூறினானே, கணவன் என்று கவன்றாள். "தன்னை விட்டுச் செல்லக் காரணம் என்ன?"—என்று சீதை கேட்க, "கானகம் கற்கள் நிறைந்தது. உன் மெல்லடிகள் அவற்றைத் தாங்கா," என்று கூறிட அதற்குச் சீதை சுடச்சுட, "உங்கள் பிரிவை விட அப்பெருங் காடு சுடுமா?" என்று கூறிக் "கூடவே வருவேன்!" என்று அடம் பிடித்தாள். அவளும் மரவுரி ஏற்றி அவர்களுடன் புறப்பட்டாள்.



நகரமாந்தர் வருந்தினர். அவர்கள் பின் சென்றனர். மாலையில் கதிரவன் மலையிடை மறையும் வேளை. காரிருள் கவிந்தது. யாவரும் ஒரு சோலையை அணுகினர்.

இராமன், தேரோட்டி வந்த சுமந்திரனை அழைத்து, "நம் பின்னால் நடந்து வந்த நகரமாந்தரைத் திரும்பப் போகச் சொன்னாலும் போகமாட்டார்கள். ஆகவே, நீ தேரைத் திருப்பிச் செலுத்துக: இரா வேளையில் ஒரு யோசனை தூரத்திற்குப் பிந்தி சோலையில் தங்கியுள்ள அவர்கள் உம் தேர் சுவட்டைக் கண்டு நான் திரும்பியதாக நினைப்பர்; மகிழ்வர். நீ தேரைச் செலுத்துக!" என்று சொன்னான். சுமந்திரன் வருந்தினான் நிலத்தில் விழுந்து புரண்டு அழுதான். இராமபிரான் அவனுக்கு ஆறுதல் கூறினான்.

"யாவருக்கும் தன் வணக்கம் கூறுக!" என்றான் சுமந்திரன் சீதையை நோக்கிட அவள் அவனை வணங்கி அரசர்க்கும் அத்தையர்க்கும் என் வணக்கம் தெரிவிப்பாயாக! நான் அருமையாய் வளர்த்த நாகணவாய் பிள்ளையையும் கிளியையும் அன்புடன் பாது காக்கச் சொல்வாயாக!" என்றாள். இலக்குவனோ தயரதனை ஏசிப் பேசினான். இராமன் அவனை அடக்கினான். சுமந்திரன் இராமன்

சொன்ன வண்ணம் தேரோடு திரும்பினான். இராம, இலக்குவ, சீதையாகிய மூவரும் கானகம் புக்கனர்.



அழுத கண்ணோடும், அழுகின்ற நெஞ்சோடும் சுமந்திரன் அயோத்தி போந்தான். நடந்ததை வசிட்ட முனிக்கு வருந்திக் கூறினான். சுமந்திரனோடு தேர் திரும்பியது, என்பது கேட்ட தயரதன் கண் விழித்தான்.

வசிட்டன், "நம்பி வந்திலன்" என்றான். தயரதன் சோர்ந்தான். "தேர்ப் பாக! இராமன் அருகில் உள்ளானா? தொலைவில் உள்ளானா?" என்று கேட்டான்.

தேர்ப்பாகன், "மூங்கில் வளர்ந்த காட்டில் இராமன்" தம்பியுடனும், சீதையுடனும் போயினன் என்ற போதே தயரதன் ஆவி நீத்தான்.

கோசலை வெந்து நொந்து வேதனைச் சொற்களை வீசினாள். வசிட்டன், "இது விதி" என்று விளம்பினான். யாவரும் துயர் உற்றனர்.



இராமன் இலக்குவனோடும், சீதையோடும் இன்முகத்துடன் கான்வழி நடக்க, முனிவர்கள் அம்மூவரையும் மகிழ்ந்து வரவேற்று, விருந்து செய்தனர். சிருங்கிபேரத்துத் தலைவன் கங்கைக்கரை குகன் ஓடோடி வந்தான். இலக்குவன் அவனை அறியாது வியந்திடக் குகன் தன்னை அறிமுகம் செய்து கொண்டான். இராமன் குகனை வரச் செய்தான். குகன் இராமனுக்குத் தேனும், மீனும் அமுதினுக்கு அமைவது என்று தந்தான். இராமன் மகிழ்ந்தான் குகன் குழைந்தான். இலக்குவன் இரண்டு வரத்தால் விளைந்ததை குகனிடம் இயம்பினான்.

"நிலமகள் தவம் செய்தும், அதன் பயனாக இராமன் முடிசூடி அரசாள்வதை அவள் பெற இல்லையே!" என்று கூறி வருந்தினான்.

மாலை வந்தது இலக்குவன் காவல் புரிந்தான். மறுநாள் குகன், இராமனை அங்கேயே தங்கச் சொல்லி வேண்ட, இராமனோ புன்

முறுவல் பூத்து "புண்ணிய நதிகள் ஆடிப் புனித மாதவரைப் போற்றிப் போதுதும் பின்னர்," என்றான். குகன் ஆறு கடக்க வழி செய்தான்; கூடவே வருவேன் என்று குறிப்பிட்டான்.

இதை உணர்ந்த இராமன் அவனை நோக்கி, "நீ என் உயிர் போன்றவன்; என் தம்பி உனக்குத் தம்பி. சீதை உனக்கு உறவானவள். இந்நிலம் உன்னது. உன் ஏவல் என் உரிமை. இப்போது பிரியின் பின்னர் அது இனிக்கும். துன்புறாதே! நாங்கள் மாமன்னனின் நான்கு பிள்ளைகளாக இருந்தோம். இப்போது உன்னோடு ஐவர் ஆனோம். எனக்குத் துணையாக இலக்குவன் வருவான். நீயே நான்! நானே நீ! என் சொல் ஏற்றிச் செல்க. அயோத்திக்குத் திரும்புகையில் இங்கு வருவேன்," என்று உறுதி சொல்ல, குகன் அவ்வாணையை இனிது ஏற்று விடை கொண்டான்.



பாரத்துவாசர் முனிவரின் ஆசிரமத்தை மூவரும் அடைந்தனர். முனிவர் இராமனை அன்புடன் தழுவி நடந்ததற்காகக் கண்ணீர் பெருக்கினர். "இது ஊழின் செயல்," என்று அமைதி கொண்டார்.

மூவர்க்கும் விருந்து கொடுத்தார். மூவரையும் அங்கேயே தங்கும்படி அம்முனிவர் வற்புறுத்தினார். அதற்கு இராமபிரான், இந்த இடம் கோசல நாட்டிலிருந்து மிகுந்த தொலைவில் இல்லை. இங்கிருப்பின் அம்மக்கள் திரண்டு வந்து கூடுவர். எனவே, விருப்பம் இல்லை"என்று கூறிப் பத்து காவத தூரம் கடந்து மனைவியோடும், இளவலோடும் சித்திர கூட மலையை அடைந்தான். ஆங்கே இலக்குவன் அரிய ஒரு பர்ணக சாலையை அமைத்துத் தந்தான். இராமன் மகிழ்ந்தான்.



வசிட்ட முனிவர் அனுப்பிய தூதுவர் கேகய நாடு சென்று பரதனைக் கண்டனர். பரதன் அவர்களை நோக்கி, "தந்தையும், தமயனும் நலமா?" என்று அன்புடன் உசாவினான். கொற்றவனின் திருமுகத்தின்படி, பரதன் உடனே கோசலம் புகுந்தான். எல்லை வாயிலில் பொலிவற்ற காட்சி கண்டு பதறினான். மாறுபட்ட காட்சிகளையும், செயல்களையும் பார்த்து நெட்டுயிர்த்தான். அயோத்தியை அடைந்து, தந்தையின் மாளிகை புகுந்தான்.



# XIV

ஒரு பெண் அப்போது பரதனை அன்னை அழைப்பதாய்க் கூற, அவனும் கைகேயியை அடைந்து வணங்கினான். பின்னர் யாவரது நலத்தையும் உசாவி மன்னவனைக் காணவேண்டும் எனக்கூறினான். அதற்கு அவன், ''மன்னவன் வானுலகு உற்றான்'' என்று கூறப் பரதன் தன் நினைவு ஒடுங்கி, மரம் போல் விழுந்தான். பின்னர் எழுந்து, துயர் உந்த விம்மி, பெருமூச்செறிந்து புலம்பினான். தயரதன் பிரிவை எண்ணி அழுதான். தந்தை மாண்ட பின்னர் அத்தந்தைக்கு இணையான அண்ணனைக் காண்பேன் என்று கைகேயியிடம் தெரிவித்தான். அவளோ, ''தன் மனைவியுடனும், இளவலுடனும் காட்டில் உள்ளான்'' என்றாள்.

பரதன் தீயை உண்டவன் போல் துடித்தான். ஏங்கி, விம்மித் தாயை நோக்கி, ''இராமன் வனம் செல்லக் காரணம் என்ன? தீங்கிழைத்தானா? தெய்வத்தின் சீற்றத்தால் சென்றானா? விதியின் செயலா? தந்தை இறக்கும் முன் சென்றானா? பின் சென்றானா?'' என்று கேட்டான். இருவரும் உரையாடினர். கைகேயி, மன்னர் தாம் தந்த வரத்தால் இராமனைக் கானகத்திற்குப் போக்கி, பரதனுக்கு நாடு உரிய தாக்கியதாகக் கூறினாள்.

பரதன் தன் செவிகளைப் பொத்தினான். சினந்தான். கைகேயியைக் கொல்ல நினைத்தான், கொன்றால் இராமன் சினம் கொள்வானே என்று அது செய்யாது விட்டான், ஆயினும் தாயை நோக்கிக் கடும் சொல் வீசினான்.

''உன் கொடும் சூழ்ச்சியால் தந்தை இறந்தார். என் முன்னவன் கானகம் சென்றான் என்றதுமே உன் வாயைக் கிழித்திருக்க வேண்டும். அது செய்யாததால் உன் பேராசையால், நாட்டை ஆள ஒப்புதல் தந்த பாவியானேன். சூரிய குலத்தில் மூத்தவன் முடி சூடுதல் முறைமை. அது கெட்டது. வசைச் சொல் நிலைக்குமே. வரத்தால் கணவனைக் கொன்ற பாவியாகிய நீ இன்னும் என்ன செய்வாயோ? பழி என்னை வந்து அடைந்ததே! என் தூண்டுதலால நீ எனக்காக அரசை வரமாகப் பெற்றாய் என்று உலகத்தினர் ஏசுவரே! அண்ணன் காட்டில் கனியும், கிழங்கும் தின்றிட யான் பொற்கலத்தில் உண்பேனோ? பாவம் புரிந்த உன் வயிற்றில் பிறந்ததற்குக் கழுவாய் தேடிட யானும் கானகம் செல்வேன்'' என்று கூறிக் கோசலையின் அரண்மனை புக்கான்.

★

# XV

கோசலையின் கால்களைப் பரதன் பற்றினான், அழுது புலம்பினான்: "துயரச் செய்தி கேட்கவா பாட்டன் வீட்டில் இருந்து வந்தேன்? அண்ணனின் திருவடி கண்டேன் இல்லையே. அவன் கானகம் போவதைத் தடுப்பார் இல்லையா? தீச்செயல் செய்த தீயவள் வயிற்றில் பிறந்த யான் தகுதி அற்றவன்—யான் மாள்வேன்" என்றான்.

கோசலை பரதனை நோக்கி, "ஐயனே கைகேயியின் வஞ்சகச் செயல் உனக்கு முன்பு தெரியாதா?" என்றாள்.

நற்றாய் அயிற்றாளே என்று பரதன் அலமந்து சூளுரைத்தான்: "இராமனைக் காட்டிற்கு அனுப்பியதில் எனக்கும் பங்கு உண்டு எனில், நான் அறத்தைச் சிதைக்க முயன்றவன், பிற உயிர்களைக் கொன்று வாழ்ந்தவன், துறவு பூண்டு தவத்துடன் வாழ்பவர்க்குத் தீங்கு செய்தவன், பெண் கொலை செய்தவன், போரில் சென்று புறமுதுகிட்டு ஓடியவன். திருமாலைப் பரம்பொருளில்லை என்று சொன்னவன், தாய் பசியால் துடித்துச் சோர்ந்திருக்கும்பொழுது அவளுக்கு ஒன்றும் கொடுக்காமல் தன் வயிறு ஓம்பும் பாவி, பொய் சாட்சி கூறியவன், அந்தணர்கள் வாழும் இடங்கட்குத் தீயிட்டவன், வழக்கில் தவறாக நியாயம் கூறியவன், தெய்வங்களை இகழ்ந்தவன், கன்றுக்குப் பால் கொடாமல் அதை நலிய விட்டுத்தான் தாய்ப் பசுவின் பாலைக் கறந்து உண்டவன், பிறர் பொருளைத் திருடியவன், தனக்கு உதவி செய்தவனிடம் நன்றி மறந்து அவனைத் திட்டியவன், தன் அருகில் உள்ளோர் பசியால் வருந்தும் பொழுது அவர்களுக்கு ஒன்றும் கொடாமல் தான் மட்டும் சோற்றை உண்டு பசியாற்றியவன், அறவழியை விட்டுப் பிறவழியில் பெரும் பொருள் வல்விய மன்னன், திருமணமாகாத பெண்ணைக் கற்பழிக்க முயன்றவன், ஆசிரியனின் மனைவியைத் தீய எண்ணத்துடன் நோக்கியவன்—ஆகிய இவர்கள் செல்லும் நகரத்தை யான் அடைவேனாக!"

கோசலை, பரதன் குற்றம் அற்றவன் என்று உணர்ந்து, ஆயிரம் இராமற்கு அவனை நிகராக்கினாள். பரதன், தயரதனின் உடலைத் தேடி ஓடினான். கண்டு அழுதான், வசிட்டர் ஆணைப்படி, உடலோடு சரயு ஆற்றை அனைவரும் அடைந்தனர்.

## XVI

*தயரதனின் சூளுரைப்படி பரதன் ஈமக்கடன் செய்ய இயலாது சத்துருக்கன் அதனைச் செய்தான்.*



பரதன் அரசாள வேண்டும்: என்று அனைவரும் விரும்புவதாக வசிட்டர் உரைத்தார். இது கேட்டதும் பரதன் நஞ்சுண்டவரினும் மிகவும் நடுங்கிக் கண்ணீர் பெருக்கி உணர்விழந்து, 'என் அன்னை தவறு செய்தாள்; வசிட்டர் போன்றோர் அதனைச் செய்யலாமா? மூவுலகுக்கும் ஒப்பற்ற மூத்தவன் இருக்கத் தம்பியாகிய யான் முடிசூட்டலாமா? தவறு செய்யலாமா? அது அறமா? இராமனைக் கொணர்ந்து அவனுக்கு முடிசூட்டுவேன். இது இயலாதாயின், யானும் அவனோடு கானகம் புக்குத்தவம் மேற்கொள்வேன்,'' என்றான்.

அருகிருந்த அனைவரும் அது கேட்டு வாழ்த்தினர். பரதன் சத்ருக்கனை நோக்கிப் படைகளோடு புறப்பட ஆணை, பிறப்பிக்கச் செய்தான். படைகள் எழுந்தன. அவை முன் செலத் துயர் வடிவோடு பரதன் மரஉரி அணிந்து தாயரும், தவசியரும் அமைச்சரும் சுற்றத்தாரும அந்தணர்களும் தொடர நடந்தான்.

கூனி கூடவே வருதல கண்ட சத்ருக்கன் அவளை அடித்து வீழ்த்த முனைந்தான். பரதன் தடுத்து, ''என் தாயைக் கொன்றிருந்தால் இராமன் என் மீது சினந்திருப்பான். அதுவே இதற்குப் பொருந்தும்'' என்றான். இராமன் நடந்தே காடு புகுந்தான், என்பது தெரிந்து பரதனும் அவ்வாறே சென்றான்.



கங்கையின் வட கரையினை அடைந்தனர். அளப்பரிய படையோடு அவன் வந்திருப்பதைக் கண்டு ஐயுற்ற குகன் அப்படையை எதிர்க்க ஆயத்தமானான். ''எலி போன்ற படையைப் பாம்புபோல் அழிப்பேன்,'' என்று கூறி முன் வந்தான். ''இராமனை வெல்ல, சூழ்ந்து வந்தோர் தப்புவரோ? அவ்வாறு அவர்கள் தப்பிடின் உலகோர் எனனை நாய்க் குகன் என்று ஏசமாட்டார்களா? ஆழம் சேர் கங்கையைக் கடக்க விடுவேனோ? இராமன் எனனைத் தோழன் என்று விளித்ததைக் காத்திடப் போர் செய்வேன், இவர்களைத்

தடுப்பேன்.'' என்று குகன் கூறினான். வடகரை இருந்த சுமந்திரன குகனைக் கண்டு அறிந்து பரதனிடம் பகர்ந்தான்.

''எதிர்க்கரை நிற்பவன கங்கைக் கரைகளின் நாயகன்; இராமனுக்கு உயிர் நண்பன் விற்படை வீரர் பலர் கொண்டவன். குகன் என்னும் பெயரினன் என்றான்.

பரதன் அது கேட்டு உளமகிழ்ந்தான். குகனைக் காண விழைந்தான். சத்ருக்கனோடு கங்கையின் கரையில் போய் நின்றான. இப்போது பரதனுடைய உடம்பைக் குகன் உற்று நோக்கினான். மரஉரி அணிந்து புழுதி படிந்து, பொலிவிழந்து நின்ற பரதனைக் கண்டு அயர்ந்தான்; துயரால் விம்மி அழுதான். அவன் கை வில் நழுவியது,

தனக்குள் நினைத்தான்: ''ஆடவரில் சிறந்த பரதன் இராமனைப் போல் இருக்கிறான், அவன் அருகில் இருப்பவன் இலக்குவன் போன்று இருக்கிறான். இருவரும் துன்பமே வடிவாகத் தோன்றுகின்றனர். இராமன் போன தெற்குத்திசை நோக்கிப் பரதன் தொழுகின்றான். எம்பெருமான் தம்பியர் தவறு இழைப்பரோ?'' என்று உளம் நெகிழ்ந்தான்.

குகன் வீரர்களை விட்டுத் தனிப்படகில் தனி ஒருவனாய்ச் சென்றான். பரதனைககண்டு வணங்கினான். இருவரும் தழுவிக் கொண்டனர். பரதன் இராமனை அழைத்துச் செல்ல வந்ததாய்த் தெரிவிக்கிறான். குகன் பரதனின் அடிகளைப் பற்றிக்கொண்டு, ''புகழுக்குரியவனே! உன தந்தை உனக்கு அளித்த அரசைத் தீவினைப் பயனாகத் துறந்து. சிந்தனை முகத்தில் தேக்கி, இங்கு வந்தாய்! உனக்கு ஆயிரம் இராமரும் ஒப்பாவரோ?'' என்று வியந்தான்.

பரதன் தன் தமயன் தங்கிய இடங்களைக் கேட்டு அறிந்து துயர் கொணடான. தன்னால் அண்ணனுக்கு அருந்துயர் உற்றதே!'' என்று அழுதான்

பின்னர் இலக்குவன் தூங்காது சேவகம் செய்தது பற்றியும் கேட்டு வியந்தான். ''இலக்குவனின் அன்புக்கு ஈடு ஏது?'' என்று கூறி வருந்தினான் குகனிடம் ஆறு கடந்திட உதவி கேட்டான்.

அவனும் அது செய்தனன். அனைவரும் அடுத்த 'கரை சேர்ந்தனர். பரதன் குகனை யாவருக்கும் அறிமுகம் செய்து வைத்தனன். கோசலையையும், சுமத்திரையையும் உயர்வாக அறிமுகம் செய்து வைத்து தன் தாயை, "உலகப் பழி வளர்க்கும் தீவினையாள்," என்று கூறினன் குகன் அனைவரையும் வணங்கினான். யாவரும் பரத்துவாசர் முனிவரின் ஆசிரமம் சேர்ந்தனர்.



முனிவரும் பரதனும் உரையாடுகையில் பரதன் தான் அண்ணனுக்கு நாடு நல்குவதாயும், அதை ஏற்காவிட்டால் காடு வாழ்வேன், என்றும் கூறினான். அனைவரும் பரதனின் நல் உள்ளத்தை அறிந்து மகிழ்ந்தனர். மறுநாள் முனிவரிடம் யாவரும் விடைபெற்று முனைந்து போந்தனர். படைகள் புழுதியோடு புறப்பட, அந்த அதிர்வு கண்ட இலக்குவன், ஒரு குன்றின் உச்சியின் மேல் நின்று, பரதன் வருவதைக் கண்டு பெரும் சீற்றம் கொண்டான்.

பரதன் போர் செய்ய வருவதாக இலக்குவன், இராமனிடம் கூறினான். தானே தன் வில் ஆற்றலால் அனைவரையும அழிப்பேன் என்று சீறிச் செப்பினான். இராமன் இலக்குவனை நோக்கி "பரதன் நல்லவன், அறதேவதையின் வடிவமானவன்!" என்றெல்லாம் அறிவுறுத்துகிறான், பரதன் படைகளை நிறுத்தித்தான் தம்பி சத்ருக்கனுடன் இராமனிடம் வந்தான். கைகளை உயர்த்தியபடி நடந்தான். இலக்குவனை நோக்கி இராமன் "அவன் கோலத்தைக் காண்பாயாக!" என்று ஏளனமாய்ச் சொன்னான். இலக்குவன் இரங்கிப் போனான்.

பரதன் இராமனைக் கண்டு ஓடினான். திருவடிகளில் விழுந்து வணங்கினான் :

'நான் அறத்தை நினைக்காத பாவி. மரபினையும் முறைமையையும் கெடுத்தேன்" என்று கூறி அரற்றினான்.

இராமன் கணணீர் பொழிந்து பரதனைத் தழுவி "துன்பக் கடலில் மூழ்கி இருக்கிறாயே! நம் தந்தை நலமா?" என்று கேட்டான். பரதன், "உன்னுடைய பிரிவு எனும் நோயினாலும், என்னைப் பெற்றவள் வரத்தினாலும் வாய்மையை நிலைநிறுத்தி,

அவர் வானுலகம் சென்றார்' என்றான். இராமனது மனம் காற்றாடி போல் சுழன்றது. மண்ணில விழுந்து மயங்கினான். உணர்வு பெற்று ஓலமிட்டான். யாவரும் அவனுக்கு ஆறுதல் கூறினர். வசிட்டர், "இறப்பும் பிறப்பும் யாவர்க்கும் இயல்பானவை என்று உணர்த்தினார். கங்கைக் கரையில் இராமன் தந்தைக்குச் செய்ய வேண்டிய நீர்க்கடன்களைச் செய்து முடித்தான். பரதன் தழைக் குடிசை வந்து, சீதையைக் கண்டு திருவடிகளில் விழுந்து அழ, இராமன் அவளிடம் தந்தை இறந்த செய்தியைக் கூற, அவளும் அழுதாள்; புலம்பினாள்.

சுமந்திரனை இராமன் கண்டு தந்தையின் நினைப்பு முந்த அவனைக் கட்டிக்கொண்டு அழுதான். மறுநாள் இராமன் பரதனை நோக்கி, "பரதனே தந்தை இறந்து விட்டார். அவரது ஆணைப்படி அரசு உன்னுடையதே! அப்படி இருக்க, நீ முடி சூடி அரசு ஆளாமல் தவக்கோலம் பூண்டு இருப்பது ஏன்?" என்று கேட்டான்.

உடனே பரதன் பதைபதைத்து, எழுந்து கைகளைக் கூப்பி, "உன்னையன்றி அறத்தில் நிற்க வல்லவர் யார் உளர்? நீ அறநெறியிலிருந்து பின் வாங்குவாயோ? சான்றோர் ஏற்க முடியாத வரங்களை என தாய் வாங்கினாள். அதனால் உன்னைக் காட்டுக்கும் நம் தந்தையை வானுலகிற்கும் அனுப்பியவளுடைய மகனாகிய இந்தப் பாவிக்கு இறக்கத் துணிவில்லை தவமும் செய்யக்கூடாது என்றால் இப்பழியை என்ன செய்து யான் நீக்குவேன்? கற்பில்லாக் காரிகையரின் குணமும், பொறுமையற்ற தவமும், இரக்கமற்ற அறமும் ஆகியவற்றினும் மரபு முறையினின்று நீங்கிய அரசாட்சி கொடியது" என்றான்.

பின்னும் பரதனே கூறினான்: "சக்கரவர்த்தி தயரதனுக்கு மூத்த மகனாய்ப் பிறந்து, உனக்கே உரிய அரசை ஆள வேண்டிய நீ அதனைத் துறந்து அறத்தைக் காத்துக் கொள்கிறாய் உரிமையற்ற இளையவனாகிய யானோ அறத்தைக் கொன்று அரசு நடத்திப் பழியை ஏற்றுக் கொள்ளுவதோ? உன் மீதுள்ள அளப்பரும் அன்பினால் தந்தை இறக்க, நீ வெங்கானம் விரைய அப்போது நான் அரசைக் கொள்வதற்கு அற்றம் நோக்கி, அரசை வவ்வும் பெற்றியுடைய பகைவனோ? தந்தை செய்த தீமையும் என் தாய் செய்த கேட்டையும் நீக்குமாறு, நீ அயோத்திக்குத் திரும்பி வந்து

அரசு செய்ய வேண்டும்!'' இவ்வாறு பரதன் கூறிய பண்பு மிகக சொற்களைக் கேட்டான.

இராமன் அவனை நோக்கி, "தம்பி பரதனே! மற்ற எல்லோரை விடவும் பெற்றோர் உயர்ந்தவர். தேவரினும், தெய்வத்தினும் சிறந்தவர். அத்தகைய தாய் வரங் கொள்ளத் தந்தையின் ஆணையால் நான் அவர்களுடைய சொற்களைக் கடவாமல் அறத்தை மேற்கொண்டு கானகம் புகுந்தேன். அந்தச் செயலை நீ வேண்டிக் கொள்வதால் விட்டு விடுதல் நியாயம் ஆகுமோ? இரு முது குரவருக்கும் மக்கள் செய்யும் உதவி அவர்களுக்குப் புகழைத் தேடிக் கொடுப்பதா? அல்லது பழியை விளைவிப்பதா? தாயின் வரத்தை நிறைவேற்றாமல் தரணியை ஆள ஆசை கொண்டால், அதனால் தந்தை பொய்த்தவராக நரகை அடையாரோ? அதற்கு உடன்பட்டு அரசை ஆள்வேனோ? வரத்தினால் தந்தை உனக்களித்த அரசு முறைமையின்படி உன்னுடையதே! அரசுஏற்று நடத்தும் வலிமையும் உனக்கு உள்ளது. எனவே அரசு உனக்கே சொந்தம. அதனை ஆள்வாயாக!'' என்றனன்

பரதன் பதிலுரைக்கையில் ''எனக்கு மூத்தவனாகவும், தன்னொப்பர் இல்லாதவனாகவும் நான் இதை இன்று உனக்குத் தருகிறேன். நீ மன்னனாக வந்து முடிசூட்டிக் கொள். பாரோர் அனைவரும் படர் மிகுந்து உழல, நீ உன் மனம் போனவாறு காட்டில் வாழ்வேன், என்று கூறாமல் மீண்டும் அயோத்திக்கு வந்து அரசை ஏற்க வேண்டும்!'' என்று கூறி இராமனது திருவடிகளைப் பற்றி வேண்டினான்

அதற்கு இராமன், ''என மீது உனக்கு உள்ள அன்பால் வரத்தின் மூலமும், வாக்கின் மூலமும் உனக்குக் கிடைத்த அரசை எனக்குத் தருகிறேன், என்றால் அது நீதியாகுமா? தந்தையின் கட்டளைப் படி பதினான்கு ஆண்டுகள் காட்டில் நான் வாழ வேண்டாமோ? அது இன்றுடன் முடிவடைந்து விடுமா? அவர் ஆணைப்படி, பதினான்கு ஆண்டுகள் நான் காட்டில் வாழும் போது, நீ என் ஆணையால் நாட்டை ஆள்வாய்! மன்னர் உயிருடன் இருந்த போது அவர் என்னை முடிபுனையக் கூறியதை யான் ஏற்றதற்குக் காரணம், அவனுடைய சொல்லை நான் மறுப்பதற்கு அஞ்சியதே ஆகும். அதைப்போல, மூத்தவனான எனதுஆணையை ஏற்று, நான் கூறியபடி அரசு ஆள்வாயாக! வருந்திடாதே!' என்று கூறினான்.

# XXI

இடையில் பரதன் பதில் கூறத் தொடங்கியபோது, அதனை வசிட்டர் தடுத்தார். பின அவர் இராமனை நோக்கி, "வள்ளலே! தொன்று தொட்டு உங்கள் குல வேந்தர்கள் எவரும் முறை தவறிய தில்லை ஐம்பெருங் குரவருள் இம்மை, மறுமை ஆகிய இருமைக்கும் உதவும் கல்வியைக் கற்பித்த ஆசிரியரே தலை சிறந்தவர் என்பர். நான உனக்கு ஆசிரியன். எனவே என் சொல்லைத் தட்டாமல் அயோத்திக்குச் சென்று அரசை ஏற்றுப் புவியைப் புரப்பாயாக!" என்றார்.

வசிட்டரை நோக்கி இராமன், இரு கைகளையும் கூப்பி வணக்கம் கூறி, "பிரமனின் மைந்தரே! ஒரு கட்டளையை இடுகிறவர் பெரியோர்களாயினும், ஆசிரியராயினும், தாய் தந்தையர் ஆயினும், புதல்வர் ஆயினும் அதனை ஒரு முறை ஏற்றுக் கொண்ட பின் அதனை மற்றவர் பொருட்டுத் தள்ளிட முடியுமா? தாய் தந்தை யரின் ஆணையை மேற் கொள்ளாமல் கொடிய புலையனாய்த் திரிவதினும் நாயாகத் திரிவது மேல் அன்றோ? முன்னால் தாய் தந்தையர் இட்ட கட்டளையைச் செய்வேன் என்று ஏற்றுக் கொண்ட பின், இப்போது நீர் அதை மறுத்து வேறொரு ஆணையிட்டால், நான் என் செய்வது? நீரே உரைப்பீராக!' என்றான. வசிட்டர் பதில் கூற முடியாமல் வாளாவிருந்தார்.

அப்பொழுது பரதன், "அப்படியானால் அரசை ஆள்பவர் ஆளட்டும். அதைப் பற்றி எனக்கு அக்கறையில்லை. நான் இராமனுடன் காட்டிற்குச் செல்லுதல் உறுதி" என்றான்.

பரதனின் பிடிவாதத்திற்கு இரங்கி இராமன் நாட்டிற்குத் திரும்பி விட்டால் தங்களுடைய காரியமான அரக்கரை அழித்தல் நிறைவேறாது, எனறு அஞ்சி, ஒன்று கூடி ஆராய்ந்த தேவர்கள் விண்ணிலிருந்து, "பரதனே! இராமன் தன்னுடைய தந்தையின் சொல்லைக் காக்கும் கொள்கையுடன் பதினான்கு ஆண்டுகள் காட்டில் வாழ்வானாக! அப்பொழுது நாட்டைக் காத்தல் உன் கடன்," என்று உரைத்தனர். உடனே இராமன் பரதனுடைய கையைப் பற்றிக் கொணடு, "தம்பி! தேவர்களின் சொல்லைத் தட்டக் கூடாது, என்று உன்னைக் கேட்டுக் கொள்கிறேன் ஆகையால் என் ஆணைப்படி அரசை ஆள்வாயாக!" என்றான்.

பரதன் இராமனை நோக்கி, "அப்படியானால் பதினான்கு ஆண்டுகள் கழிந்தவுடன் நீ அயோத்திக்கு வந்து, அரசை ஏற்க

வேண்டும். இல்லாவிடில் நான் தீயில் புகுந்து உயிரை விடுவேன் இது உறுதி. உன் மீது ஆணை!'' என்றான். இராமன் அதனை ஏற்றான்.

இராமனைப் பிரிந்திட வேண்டி வந்ததே, என எண்ணிப் பரதன் விம்மி அழுதான். அவன் இராமனுடைய திருவடி நிலைகளைத் தருமாறு அவனிடம் வேண்டினான். இராமனும் கழற்றிக் கொடுத்தான். பரதன் அதனையே தனது முடியாகக் கருதி, அவற்றைத் தன் தலை மீது வைத்துக்கொண்டு, நாட்டை நோக்கிப் போனான். அவனுடன் வந்த சான்றோர்களும், படைகளும், தாயரும், சுற்றத்தாரும், தவசிகளும், வசிட்டரும் அயோத்திக்குத் திரும்பிச் சென்றனர். பரதனோ, அயோத்திக்குச் செல்லாமல் நந்திக் கிராமம் சென்று, அங்கே இராமனின் பாதுகைகளை அரியணை மீது வைத்து, அவை செங்கோல் செலுத்த, இவன் அழுதபடி ஐம்பொறிகளையும் அடக்கி இருந்தான்.

சித்திர கூடத்தில் தான் தங்கி இருப்பது மக்களுக்குத் தெரிந்து விட்டால், அன்போடு அடிக்கடி வந்து வருந்துவர் என எண்ணிய இராமன் சீதையுடனும், இலக்குவனுடனும் புறப்பட்டுத் தென் திசையை நோக்கிப் பயணம் மேற்கொண்டான்.



# ஆய்வுரை

டாக்டர் சிலம்பொலி சு. செல்லப்பன்
தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர்

## காப்பிய நாடகம்

கம்ப இராமாயணப் பாடல்களை உள்ளது உள்ளவாறே நாடக உரையாடலாக ஆக்கிக் காண்டத்திற்கு ஒரு நூலாகக் 'கம்ப நாடகம்' எனும் தலைப்பில் திரு. கோ. செல்வம் அவர்கள் வெளியிட்டு வருவதில் இஃது இரண்டாவது காண்டமான அயோத்தியா காண்ட நாடக ஆக்கமாகும். உரையாடல்களால் அமைந்த கவிதை நாடகங்கள் தமிழில் 19ஆம் நூற்றாண்டின் இறுதியில்தான் தோன்றின. 1891-இல் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை 'மனோன்மணியம்' எனும் கவிதை நாடகத்தை இயற்றினார். அதனையடுத்து அம்முறையில் இதுவரை சற்றொப்ப 60 கவிதை நாடகங்களே தமிழில் வெளிவந்துள்ளன. ஒன்றின் நேர் மொழி பெயர்ப்பு, ஒரு கருத்து அல்லது கதையைத் தழுவிப் புதியது படைத்தல், முற்றிலும் கற்பனையாகப் புனைந்து கொள்ளுதல் எனக் கவிதை நாடகங்கள் — மொழிபெயர்ப்பு, தழுவல், கற்பனை என மூவகையினதாகும். திரு கோ. செல்வம் அவர்களோ ஒரு காப்பியத்தின் பாடல்களைத் தக்கவாறு இயைத்து உரையாடலாக்கி இந்நாடகத்தை உருவாக்கியுள்ளார். கவிதை நாடக வகையில் இதனைப் புதியதொரு வகையாகக் 'காப்பிய நாடகம்' எனச் சொல்லலாம். திரு. மு. வை. அரவிந்தன் அவர்கள் சிலப்பதிகாரத்தை இம்முறையில், நாடகமாக்கி 'சிலம்புச் செல்வி' எனும் பெயரில் வெளியிட்டுள்ளார். இவ்விரண்டு மட்டுமே இப்போது தமிழில் கிடைக்கும் காப்பிய நாடகங்களாம்.

## உரையாடல்

காப்பியத்தில் செய்தியாக அமைவனவும், கதை மாந்தர் கூற்றாக அமைவனவுமாகப் பாடல்கள் அமைந்திருக்கும், கதை

மாந்தர் கூற்றாக வருவனவற்றை அவ்வாறே உரையாடலாக ஆக்கிக் கொள்ளலாம். ஆனால் செய்தியாக அமைந்துள்ள பாடல் களை அவற்றின் உருவம் சிதையாமலும் பொருள் மாறாமலும் உரையாடலாக்குவதற்குத் தனித்திறமை வேண்டும் திரு. கோ. செல்வம் அவர்கள் சிறந்த பல உத்திகளைக் கையாண்டு இதில் வெற்றி பெற்றுள்ளார் என்று துணிந்து கூறலாம்.

தயரதன் அமைச்சர்கள் அரசவையை அடைந்து முதலில் வசிட்டனை வணங்கி, பின்னர் தயரதனை வணங்கி அமர்ந்தனர் என்பதைக் கம்ப ராமாயணம்

"முறைமையின் எய்தினர் ; முந்தி அந்தமில்
அறிவனை வணங்கி, தம் அரசைக் கைதொழுது"

எனச் செய்தியாகக் கூறுகிறது. இதனை இந்நூலாசிரியர் அமைச் சர்கள் பேச்சாக

அமைச்சர்கள் :

— அந்தம்இல்
அறிவ ! வணங்கினோம் ! அரச கைதொழுதேம்! (பக் - 2)

என அமைத்துள்ளார். மூலச் சொற்களில் எங்கெங்கு மாற்றங்கள் செய்யப்படுகின்றனவோ அவ்விடங்கள் தடித்த எழுத்துகளால் அச்சிடப்பட்டு, மாற்றப்பட்டுள்ளவை எவையெவை என்பது நூலில் தெளிவாகக் காட்டப்பட்டிருப்பது தனிச்சிறப்பாம். சொற் களில் எழுத்துகளைக் மாற்றம் செய்து இவ்வுரையாடல் உருவாக் கப்பட்டுள்ளது.

இராமனுக்கு முடிசூட எண்ணியிருப்பதைத் தயரதன் மன்னர் களிடம் அறிவித்தபோது யாவரும் மகிழ்ந்து அவன் கருத்தை விரும்பி வரவேற்றனர் என்பதை கம்பர்

ஒத்த சிந்தையர் உவகையின் ஒருவரின் ஒருவர்
தத்த மக்குஉற்ற அரசஎனத் தழைக்கின்ற மனத்தர்
முத்த வெண்குடை முறைமுறை தொழுதார்
அத்த நன்றுஎன அன்பினோடு அறிவிப்பது ஆனார் !

எனப் பாடியுள்ளார். பாடலில் சில முக்கியமான சொற்களை மட்டும் எடுத்துக் கோர்வையாக்கிப் பின்வரும் உரையாடல் உருவாக்கப் பெற்றுள்ளது.

மன்னருள் ஒருவர் : (முறை முறை தொழுது)

அத்த நன்று! யாம் ஒத்த சிந்தையர்!

தொடர் அமைதிக்காக 'யாம்' என்ற சொல்லை ஆசிரியர் சேர்த்துக் கொண்டுள்ளார். (பக் - 6)

மந்தரை கைகேயியிடம் 'இராமனுக்கு நாளை முடிசூட்டு விழா' எனத் தெரிவிக்கிறாள். கைகேயி பெரிதும் மகிழ்ந்து அவளுக்கு ஒரு பொன்மாலையைப் பரிசளிக்கிறாள். கூனியோ குமுறியவளாய் மாலையை எறிந்து சினத்துடன் பேசத் தொடங்கினாள்.

தெழித்தனள் உரப்பினள் சிறுகண் தீஉக
விழித்தனள் வைதனள் வெய்து உயிர்த்தனள்
அழித்தனள் அழுதனள் அம்பொன் மாலையால்
குழித்தனள் நிலத்தைஅக் கொடிய கூனியே -

என்ற பாடலுடன், மேலே கூனி பேசியதைக் கம்பர் குறிப்பிட்டுள்ளார். மந்தரையின் கொடுஞ்சொற்களைக் கேட்ட கைகேயி அவளைக் கடிந்து பேசுவதாகக் காப்பியம் சொல்கிறது. இந் நாடகத்தில் இதனை

(கயல்கண் சிவப்புற நோக்கி)

தெழித்தனை உரப்பினை சிறுகண் தீஉக
விழித்தனை வைதனை வெய்து உயிர்த்தனை
அழித்தனை அழுதனை அம்பொன் மாலையால்
குழித்தனை நிலத்தை; கொடிய கூனியே! (பக். 14)

எனக் கைகேயி மந்தரையை விளித்துப் பேசுவதாக ஆசிரியர் அமைத்துக் கொள்கிறார்.

குகன், பரதனையும் உடன் வந்தவர்களையும் சென்று கண்ட பொழுது கோசலையைக் காட்டி 'இவர் யார்'? என வினவுதலும்.

பரதன் மறுமொழியும், கோசலை குகனை இன்னானென அறிந்து போற்றுதலும், அடுத்து குகன் சுமித்திரை, கைகேயியைக் காட்சிக் கேட்டறிதலும் கம்பராமாயணத்தில் அருமையான நாடகக் காட்சி யாகவே சித்தரிக்கப்பட்டுள்ளது. இந்நாடக ஆசிரியர் மூலத்தின் தன்மைக்கு மேலும் மெருகேற்றும் வகையில் அக்காட்சியின் உரையாடல்களை அமைத்திருப்பது பெரிதும் பாராட்டத் தக்க தாயுள்ளது. (பக்.75)

உரையாடலை அமைப்பதில் ஆசிரியர் தனிக் கவனம் செலுத்தி யுள்ளார், என்பது நாடகம் முழுவதும் நன்கு தென்படுகிறது.

கதை மாந்தர் கூற்று

நாடக உரையாடல் தற்கூற்று, புறக்கூற்று, முன்னிலைக் கூற்று, விட்புலக் கூற்று என நான்கு வகைப்படும். இதனை

''கூற்றெனப் படுவது கூறுங் காலைத்
தற்கூற் றுப்புறக் கூற்று, முன்னிலைக்
கூற்று, விட்புலக் கூற்றென நான்காம்''

என 'நாடகவியல்' கூறுகின்றது. மேடையில் கதைமாந்தர் ஒருவர், கேட்கும் வேறு கதை மாந்தரின்றித் தனக்குள்ளே பேசிக் கொள்ளும் பேச்சு தற்கூற்று அல்லது தனிமொழி (Soliloquy) எனப்படும். காட்சிகளில் நாடக மாந்தர் பலரிருக்க அவருள் இருவரோ அல்லது மேற்பட்டவரோ பிற கதைமாந்தர்கள் தாம் கூறுவதை அறியாவண்ணம் தமக்குள்ளே பேசிக் கொள்வது புறக் கூற்று எனப்படும். ஆங்கிலத்தில் இதனை (aside) என்பர். ஒருவன் தனக்குள்ளும், ஒரு சிலர் தமக்குள்ளும் பேசிக் கொள்வதாயினும் அப்பேச்சு நாடகம் காணுநர்க்குச் செவிப்புலனாதல் வேண்டும். காட்சியிலுள்ள அனைத்துக் கதைமாந்தர்களும் கேட்குமாறு பேசுவது முன்னிலைக் கூற்று (open speech). எவர் கண்ணுக்கும் தெரியாமல் உருவமில்லாமல் விண்ணிலிருந்து யாவர்க்கும் தெளி வாய்த் தெரியக் கூறுவது விட்புலக் கூற்றாம். இதனை வட நூலார் அசரீரி அல்லது ஆகாச பாஷிதம் என்பர்.

தனக்குள் பேசிக்கொள்வது தனிமொழி. அதனை ஒரு காட்சி யில் பிற கதை மாந்தரிருக்க ஒருவர் தனக்குள்ளே அதாவது

தனக்கு மட்டுமாகப் பேசிக் கொள்வது, மேடையில் பிற கதை மாந்தரெவருமின்றி ஒரு காட்சியையோ, நிகழ்ச்சியையோ குறித்து ஒரு கதை மாந்தர் தனக்குள்ளே பேசிக் கொள்வது என இரு வகையாகப் பிரிக்கலாம். இரண்டாவது வகை நீண்ட தனி மொழியாக இருக்கும், இந்த நாடகத்தில் முதல் வகைத் தனிமொழி (பலரிடையே தனக்குள் பேசிக்கொள்வது) மட்டுமே உள்ளது. இரண்டாவது வகை தென்படவில்லை; புறக் கூற்றும் (aside) இல்லை. விட்புலக் கூற்று எனச் சொல்லுமளவிலும் எதுவும் இல்லை. காட்சி 25 இல் தேவர்கள் கூறுவதை (பக். 86) வேண்டு மாயின் விட்புலக் கூற்றின் சாயலாகக் கொள்ளலாம். அங்கும் 'தேவர்கள் போந்து' எனக் குறிப்பிட்டிருப்பதால் - அவர்கள் கட் புலனாவதால் - அதுவும் விட்புலக் கூற்றுக்குப் பொருந்துவதாக இல்லை. எனவே இந்நாடகம் முன்னிலைக் கூற்றைப் பெருமளவில் கொண்டுள்ளது எனக் குறிப்பிடலாம்.

தனிமொழி

நாடக ஆசிரியர் தனி மொழிகளைச் சிறப்பாகவும் பொருத்த மாகவும் அமைத்துள்ளார். தயரதன் இராமனுக்கு முடி சூட்ட முடிவு செய்திருக்கும் செய்தியை மங்கையர் நால்வர் கோசலையிடம் கூறினர். அப்போது கோசலைக்கு ஏற்பட்ட மனநிலைமை

''சிறக்கும் செல்வம் மகற்கு' என சிந்தையில்
பிறக்கும் பேர்உவ கைக்கடல் பெட்பு அற
வறக்கும் மாவட வைக்கனல் ஆனதால்
துறக்கும் மன்னவன் என்னும் துணுக்கமே''

எனக் கம்பர் பாடியுள்ளார். இது கோசலையின் மனநிலை பற்றிய தாதலால் நாடக ஆசிரியர் இதனை

கோசலை : (தனக்குள் உவகையுடன்)

சிறக்கும் செல்வம் மகற்கு

(தனக்குள் தயக்கத்துடன்)

துறக்கும் மன்னவன் என்னும் துணுக்கம்
அப்பேர் உவகைக் கடல்
வறக்கும் மாவடவைக் கனல் ஆனதே ! (பக், 10)

எனக் கோசலையின் தனி மொழியாக அமைத்துக் கொள்கிறார்.

பரதன் இராமனை நாடு திரும்பி 'அரசு செய்க' என வேண்டு கிறான். பரதனது வேண்டுகோள் தக்கதன்று என அவனுக்கு இராமன் எடுத்துரைக்கிறான்.

சொற்ற வாசகத் துணிவு உணர்ந்தபின்
'இற்றதோ இவன்மனம்' என்று எண்ணுவான்
வெற்றிவீர ! யான் விளம்பக் கேள்'எனா
முற்றும் நோக்கினான் முனிதல் மேயினான்.

இராமன் தனக்குள் எண்ணுவதும் இலக்குவனுக்கு எடுத்துரைப்பதுமாகிய செய்தியைச் சொல்லும் பாடல் இது. எனவே இதனை தற்கூற்று, முன்னிலைக் கூற்று இரண்டையும் கொண்டதாக நாடக ஆசிரியர்

இராமன் : (தனக்குள்)

இற்றதோ இவன் மனம் ?

(பரதனை நோக்கி) வெற்றி வீர ! யான் விளம்பக் கேள் (பக். 83)

எனச் சிறப்பாக அமைத்துக் கொள்கிறார்.

மனத்துள் நினைக்கின்றதாகச் செய்திகள் அமையும் இடங்களை யெல்லாம் தனிமொழிக் காட்சிகளாக ஆசிரியர் ஆக்கிக் கொள்வது காட்சியமைப்பைப் பெரிதும் அழகு செய்கிறது.

என்று எழுந்தான், என்னா வந்தான், என்றென்று தழைக்கின்ற உள்ளத்தாள்முன் சென்றான், என்னா உன்னுவாள், என்று உன்னா, என்னா தன்னை மறந்தான், எனா உயிர்உமிழா நின்றான், என்று உன்னுவான், என்று தம் சிந்தை உந்த, என்று அன்மினார், எனல் தெரிகின்றான், என்று மனம் தளர்ந்து கூறுவாள், எனத் தழங்கு

சீற்றத்தான்—இத்தகு முடிவுகளைக் கொண்டுள்ள பாடல்கள் உள்ள இடங்களையெல்லாம் ஆசிரியர் தனிமொழிகள் அமைக்கப் பயன் படுத்திக் கொண்டுள்ளார். மன உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் இடங்கள் தற்கூற்றுக்குரிய இடங்களாக விளங்குகின்ற இந் நாடகத்தில் 24 இடங்களில் தற்கூற்றுகள் தென்படுகின்றன.

விளக்கக் குறிப்புகள்

நாடகக் காட்சிகளில் உரையாடல்களிடையே செய்தி விளக்கம் ஆங்காங்கே அடைப்புக் குறிக்குள் தரப்படும். உரையாடல் இணைப்புக்கு இவ் விளக்கங்கள் துணை செய்யும். அடைப்புக்குள் ளிருப்பது நாடக ஆசிரியர் தான் தருகின்ற குறிப்பாக இருக்கும். இந்நாடகத்தில் ஆசிரியர் அடைப்புக்குள் செய்தி விளக்கத்திற்காகத் தந்துள்ள தொடர்கள் கூட கம்பஇராமாயணப் பாடல் தொடர்க ளாகவே உள்ளன. மிகச் சில இடங்களில் மட்டுமே ஆசிரியர் தானே கூறியுள்ள தொடர்களைக் காண முடிகிறது.

| | |
|---|---|
| (நெடுங்கணின் ஆலி கோர்ப்ப) | பக். 17 |
| (தாயைக் கைத்தலத்தின் எடுத்து) | பக். 26 |
| (இருகண் நீர் அருவி சோர) | பக். 53 |

அடைப்புக் குறிக்குள் உள்ளவை கம்பராமாயணத் தொடர்களாம்

அடைப்புக் குறிக்குள் பல பாடல்களில் உள்ள தொடர்களை ஒன்றிணைத்து தருகின்ற பாங்கும் தென்படுகிறது.

(ஆழி நெடுங்கை மடங்கல் ஆளி அன்னான்)
(ஆயிழை தன்னை அடைந்தனன்)

இதில் முதலடி ஒரு பாடலிலும், இரண்டாம் அடி அடுத்த பாட லிலும் உள்ள தொடர்களாம்.

விளி

கதை மாந்தர்களை விளிக்க, நாடக ஆசிரியர் அம்மாந்தர் களைக் குறிக்கக் கம்பன் கையாண்டுள்ள அதே தொடர்களை விளித் தொடர்களாக மாற்றிக் கொண்டுள்ளார்.

கோசலையை

—'நால்வர்க்கும்
மறுவில் அன்பினில் வேற்றுமை மாற்றினாள்' எனக் கம்பர் கூறுவதை, கோசலையை இராமன் விளக்குமிடத்தில் இந் நூலாசிரியர்

இராமன் :

நால்வர்க்கும் மறுஇல் அன்பினில் வேற்றுமை மாற்றினோய்! (பக். 25) என அமைத்துக் கொள்கிறார்.

"தென்சொல் கடந்தான் வடசொல் கலைக்கு எல்லை தேர்ந்தான்" என்பது கம்பர் இராமனைப் பற்றிக் கூறியுள்ள தொடர்கள். நாடகத்தில் இலக்குவன் இராமனிடம் பேச நேருமிடத்தில்

"தென்சொல் கடந்தாய்! வடசொல் கலைக்கு எல்லை தேர்ந்தாய்!" என விளித் தொடர்களாக மாற்றிக் கொள்கிறார். (பக்.38)

'வில்தடந் தாமரைச் செங்கன் வீரனை' எனும் கம்பராமாயணத் தொடர் நாடகத்தில் "வில்தடந் தாமரைச் செங்கண் வீர!" என அமைத்துக் கொள்ளப்படுகிறது.

இவ்வாறே நாடக முழுவதிலுமுள்ள விளித் தொடர்கள் கம்பனுடைய தொடர்களாகவே எடுத்தாளப்பட்டுள்ளன.

சிறப்பு உத்திகள்

காப்பியத்தில் கவிக்கூற்றாக உள்ள பாடல்கள் நாடகத்தில் கதை மாந்தர்களின் கூற்றுகளாக அமைத்துக் காட்டப்பட்டுள்ளன. தயரதனுடைய ஆலோசனை மண்டபத்திற்கு வசிட்டரும் அமைச்சர்களும் வந்தனர். அமைச்சர்களின் இயல்பைக் கம்பர் பாடியுள்ளவற்றை 'வந்துள்ள அமைச்சர்கள் இத்தகைய பெருமைக்குரியவர் என வசிட்டர் தயரதனுக்குக் கூறுவது போல வசிட்டர் கூற்றாக அமைத்துக் கொண்டுள்ளது சிறந்தஉத்தியாகும், (பக்.1)

குகன் தோற்றம் பற்றிய காப்பியப் பாடல்களை அவனைப் பற்றி முனிவர்கள் இலக்குவனுக்குக் கூறும் கூற்றாக நாடகத்தில் எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது. (பக்.51)

இராமன் காடு செல்வான் என்பதைக் கேட்டோர் துயருற்ற னர். அப்போது அயோத்தியில் உயிருள்ளனவும் உயிரில்லாதனவும் அழுதன என்பதைக் கம்பர்

"கிள்ளையொடு பூவை அழுத.... ...

ஆவும் அழுத........"

என இரண்டு பாடல்களில் சொல்லும் செய்தி நகரப் பெண்கள் பேசுவதாக நாடகத்தில் தரப்பட்டுள்ளது. நகரப் பெண்ணொருத்தி 'கிள்ளையொடு பூவை அழுத ' என்று பேசுகிறாள். மற்றொருத்தி எம் இல்லில்)" "ஆவும் அழுத " எனச் சொல்லுகிறாள். (பக் 35) பாடல்களை இவ்வாறு தக்க இடத்தில் பெய்து கதை மாந்தர் பேச்சாக்கியிருக்கும் ஆசிரியர் திறம் பாராட்டுக்குரியது

குகன் இராமனை வ ண ங் கி ன ா ன். இராமன் குகனிடம் 'யாதினும் இனிய நண்ப ! இருத்தி ஈண்டு ! எனச் சொல்லி இலக்கு வனிடம் குகனுக்குத் தாங்கள் நகர் நீங்கி வந்ததற்கான காரணத் தைச் சொல்லச் சொல்கிறான்.

'திருநகர் தீர்ந்த வண்ணம் மாணவ ! தெரித்தி ! என்ன
பருவரல் தம்பிகூற, பரிந்தவன் பையுள் எய்தி,
இருகண்நீர் அருவிசோர, குகனும் ஆண்டு இருந்தான்

எனக் கம்பராமாயணச் செய்யுள் உள்ளது. 'பருவரல் தம்பி கூற' என்று மட்டுமே பாடலில் உள்ளது. இ ல க் கு வ ன் கூறியது என்ன என்ற விளக்கம் இல்லை. நாடகத்தில்

இலக்குவன் :

"கொண்டாள் வரம் இரண்டு கேகயர்கோன் கொம்புஅவட்கு
தண்டாத செங்கோல் தயரதனும் தான்அளித்தான்
ஒண்தார் முகிலை வனம்போகு என்று ஒருப்படுத்தாள்
என்தானும் வேறுஇல்லை ஈடு அடுத்தவாறு"

(பக். 53)

என இலக்குவன் நடந்த செய்தியை குகனுக்கு விரிவாகக் கூறு வதாகக் காட்டப் படுகிறது. காப்பியத்தில் இப்பாடல் முடிசூட்டு

விழாவிற் கலந்து கொள்ள வந்திருந்த மன்னர்களிடம் வசிட்டன் தெரிவித்ததாக இடம் பெற்றுள்ளது. காப்பியத்தில் முன்பு இடம் பெற்றுள்ள பாடலை இவ்விடத்தில் பெய்து குகனுக்கு விளக்கம் தரப் படுகிறது. நாடகத்திலும் உரையாடல் இப்பாடலால் முழுமை பெறுகிறது

கவிக்கூற்றைக் கதை மாந்தர் கூற்றாக்குவது, பாடல்களை முன் பின் இடத்திற்கேற்றவாறு இயைப்பது போன்ற சில தனித்த உத்தி களை நாடகத்தின் கட்டுக்கோப்புக்காக ஆசிரியர் கையாண்டுள்ள திறம் நம்மைக் களிப்பிலாழ்த்துகிறது.

நாடகச் செறிவு :

இயற்கை வருணனை, கவிஞன் தற்குறிப்பேற்றமாகச் சொல்லி யுள்ளவை போன்றவை உரையாடலில் நீக்கப்பட்டுள்ளன. முக்கிய மான பாடல்கள் விடுபடாமலிருக்க அக்கறை எடுத்துக் கொள்ளப் பட்டுள்ளது. கீழ்க்காணுபவை நாடகத்தில் இடம்பெறவில்லை. முற்றிலுமாக விடுபட்டுள்ளன. அவை கீழே தரப்பட்டுள்ளது.

இராமனுக்கு முடிசூட்டு விழா
என்று அறிந்ததும் மக்கள் நகரை அணி செய்தல் — 12 பாடல்கள்

கைகேயியின் அரண்மனையின் தயரதன் மூர்ச்சித்துக் கிடந்த இரவு விடிதலும் விடியற்கால நிகழ்ச்சிகளும் — 33 பாடல்கள்

தயரதனுக்குச் சாபம் ஏற்படக் காரணமாய் அமைந்த வரலாறு — 16 பாடல்கள்

இராமன் காடு செல்ல உறுதிபூண்டதை அறிந்த நகரமக்கள் வருந்துதலும், நகரின்பொலிவழிவும் — 48 பாடல்கள்

இராமன் காடு நோக்கிச் சென்றபோது உடன் வந்த மாந்தர் கள் இரவில் துயின்ற செய்தி — 16 பாடல்கள்

துயரம் மேலிட பூமியில் விழுந்து அழுத சுமந்திரனை இராமன் தேற்றுதல் — 11 பாடல்கள்

இராமனுடன் சென்ற மக்கள் துயின்றபோது இராமன் முதலிய வரும் வழி நடக்க சந்திரன் தோன்றி ஒளி வீசுதல் — 7 பாடல்கள்

கோசல நாட்டிற்குச் சென்ற தூதரை பரதன் உசாவுதல், அவர்கள் கொண்டு வந்த திருமுகத்தைப் பார்த்து அவர்களுக்கு நிதியம் கொடுத்தல், பரதன் சத்துருக்கனனோடு அயோத்தி புறப்படுதல், அவனுடன் வந்த சேனைகள் ஏழுநாள் பயணம் செய்து கோசல நாட்டையடைதல், கோசல நாட்டில் அவர்கள் கண்ட அலங்கோலக் காட்சிகள், பொலிவிழந்த அயோத்தியைப் பரதன் காணுதல்
— 34 பாடல்கள்

காடு சென்றுள்ள இராமனை அழைத்து வரப் பரதன் புறப்பட்டபோது உடன் சென்ற சேனையின் பெருக்கம், எழுச்சி, அச்சேனையில் சென்ற வீரர், மகளிர் நிலை — 28 பாடல்கள்

பரதனுடைய சேனை கங்கையைக் கடத்தல் — 16 பாடல்கள்

பரதன் சேனைக்குப் பரத்துவாசன் விருந்து வைத்தல், இரவு உறங்கி பகல் தோன்றியதும் படைகள் பாலையைக் கடந்து சித்திர கூடத்தை அடைதல். — 18 பாடல்கள்

இங்ஙனம முற்றிலுமாக சில பகுதி - பாடல்களை இடம் பெறாமற் செய்திருக்கும் ஆசிரியர் சில பகுதிகளில் பெரும்பாலான பாடல்களை எடுத்துக் கொண்டு சில பாடல்களை ஒதுக்கியுமுள்ளார்

முடிசூட இருக்கும் இராமனுக்கு வசிட்டன் அறிவுரை கூறியதாக உள்ள 15 பாடல்களில் 4 பாடல்கள் விடுபட்டுள்ளன.

இராமன் சீதைக்கு வனத்தின் வளங்களைக் காட்டிக்கொண்டே வழிநடப்பதாகக் காப்பியம் கூறும் 16 பாடல்களில் நாடக ஆசிரியர் 5 பாடல்களை மட்டும்ம எடுத்துக் கொண்டுள்ளார்.

சித்திர கூடத்தின் இயற்கை வளங்களை இராமன் சீதைக்குக் காட்டிப் பேசுவதாக உள்ள 35 பாடல்களில் 6 பாடல்கள் மட்டுமே எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

கைகேயியின் செயலை அறிந்த பரதன் கோபத்தால் கொதித்தெழுந்து பேசுவதாக உள்ள 16 பாடல்களில் 6 பாடல்கள் மட்டுமே நாடகத்தில் இடம் பெற்றுள்ளன.

குகன் பரதன் சேனையைக் கண்டு தவறாகக் கருதி வீரமொழி கூறும் 11 பாடல்களில் 4 பாடல்களை மட்டுமே ஆசிரியர் தேர்ந்தெடுத்துள்ளார்.

அயோத்தியா காண்டத்தில் 1202 பாடல்கள் கம்பராமாயணத்தில் உள்ளன. அவற்றுள் ஆசிரியர் இந்நாடகத்திற்கு 664 பாடல்களை மட்டுமே எடுத்துக் கொண்டுள்ளார்.

படலவாரியாகக் கம்பராமாயணத்தில் இடம்பெற்றுள்ள பாடல் எண்ணிக்கையும் அறற்றுள் நாடக ஆசிரியர் எடுத்துக் கொண்டுள்ள பாடல் எண்ணிக்கையும் கீழே தரப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| 1. | மந்திரப் படலம் | 85 — 56 |
| 2. | மந்தரை சூழ்ச்சிப்படலம் | 92 — 69 |
| 3. | கைகேசி சூழ்வினைப்படலம் | 115 — 67 |
| 4 | நகர்நீங்கு படலம் | 134 — 149 |
| 5. | தைலமாட்டு படலம் | 86 — 45 |
| 6. | கங்கைப் படலம் | 27 — 6 |
| 7. | குகப்படலம் | 46 — 32 |
| 8. | வனம்புகு படலம் | 47 — 21 |
| 9. | சித்திர கூடப்படலம் | 56 — 16 |
| 10. | பள்ளிப்படைப் படலம் | 142 — 53 |
| 11. | ஆறு செல் படலம் | 59 17 |
| 12 | கங்கை கான் படலம் 7 | 72 — 38 |
| 13. | திருவடி சூட்டு படலம் | 141 95 |
| | | 1202 — 664 |

இங்ஙனம் ஆசிரியர் கதையின் விரைந்த ஓட்டம், உரையாடல்களின் செறிவு கருதி நாடக ஆக்கத்திற்கு இன்றியமையாப் பாடல்களை மட்டுமே தெரிந்தெடுத்துக் கொண்டு அமைத்திருப்பது பாராட்டத்தக்க அருஞ்செயலாகும்.

இடம்பெற வேண்டிய இன்றியமையா நிகழ்ச்சிகள் சிலவும் இந்நாடகத்தில் இடம்பெறாமல் விடுபட்டுள்ளதையும் காண முடிகிறது நூலின் சுருக்கம் கருதி ஆசிரியர் சில நிகழ்ச்சிகளை விட்டிருக்கிறார் தயரதன் முனிவனிடம் சாபம் பெற்ற முன் வரலாறு நாடகம் படிப்போருக்குத் தெரிய வேண்டிய ஒரு செய்தி இதனை ஆசிரியர் ஒரு பின்னோக்குக் காட்சியாகவேனும் (Flash Back) அமைத்திருக்கலாம். அதேபோல் கைகேயின் நற்பண்புகளைக் கம்பன் கூற்றுப்படியே மிக உயர்த்திக் காட்டிய நாடக ஆசிரியர் அப்படிப்பட்ட உயர் குணங்கள் வாய்ந்த கைகேயி,

"அரக்கர் பாவமும் அல்லவர் இயற்றிய அறமும்
துறக்க"

அதனால்தான் இறுதியில் நல்லருள் துறந்தனள் - மனம் மாறினள் என்று காரணங்கூறும் பாடலையும் இடம்பெறச் செய்திருந்தால் பாத்திரத்திற்குரிய காரண காரியப் பொருத்தப்பாடு மிகத் தெள்ளியதாய் விளங்க வாய்ப்புண்டு. இயற்கை வருணனைகளைத் தனிமொழிகளாக அமைத்துச் சேர்த்திருக்கலாம்.

ஒரு பெரிய - மிகப் பெரிய காவியத்தை மிகச் சுருங்கிய நாடக அமைப்பாக ஆக்குகின்ற முயற்சி எளிமையான முயற்சியன்று. நாடகக் கூறுகள் அனைத்தையும் திறம்படக் கையாண்டு பெரிய வெற்றியை இந்நாடக ஆசிரியர் அனைவரும் பாராட்டத்தக்க வகையில் அடைந்திருக்கிறார் என்று துணிந்து கூறலாம்.

அன்புடன்,
ஒப்பம் — சு, செல்லப்பன்

# கம்ப நாடகம்

## பங்கம் இல் பரதன்

### காட்சி—1

இடம் : தயரத மன்னனின் ஆலோசனை மண்டபம்.

இருப்போர் : தயரதன், வசிட்ட முனிவர், மந்திரக் கிழவர், காவலர்.

தயரதன் :

நிருபரும், பொருஇல் சுற்றமும், பக்கமும் பெயர்க !

காவலன்:

பூ வரு பொலன் கழல் பொரு இல் மன்னவ! நின்
காவலின் ஆணை செய் கடவுள் ஆம் என,
தேவரும், முனிவரும் உணரும் தேவர்கள் —
மூவரின் நால்வராம் முனி வந்து எய்தினார்!

தயரதன் :

இந்திரற்கு இமையவர் குருவை ஏய்ந்த நம்
மந்திரக் கிழவர் வருக !

வசிட்டன் :

குலம் முதல் தொன்மையும், கலையின் குப்பையும்
பலமுதல் கேள்வியும் பயனும் எய்தினார்,
நலம் முதல் நலியுனும் நடுவு நோக்குவார்,
சலம் முதல் அறுத்து தருமம் தாங்கினார்—

உற்றது கொண்டு மேல் வந்து உறுபொருள் உணரும் கோளார்
மற்று அது வினையின் வந்தது ஆயினும் மாற்றல் ஆற்றும்
பெற்றியர் பிறப்பின் மேன்மைப் பெரியவர் அரிய நூலும்
கற்றவர் மானம் நோக்கின் கவரிமா அனைய நீரார்.

தம் உயிர்க்கு இறுதி எண்ணார் தலைமகன் வெகுண்டபோதும்
வெவ்மையைத் தாங்கி நீதி விடாது நின்று உரைக்கும் வீரர்
செம்மையின் திறம்பல் செல்லாத் தேற்றத்தார் தெரியும் காலம்
மும்மையும் உணர வல்லார் ஒருமையே மொழியும் நீரார்.

நல்லவும் தீயவும் நாடி நாயகற்கு
எல்லை இல் மருத்துவன் இயல்பின் எண்ணுவார்
ஒல்லை வந்து உறுவன உற்ற பெற்றியின்
தொல்லை நல்வினை என உதவும் சூழ்ச்சியார்.

அறுபதினாயிரர் எனினும் ஆண்தகைக்கு
உறுதியில் ஒன்று இவற்கு உணர்வு என்று உன்னலாம்
பெறல் அருஞ் சூழ்ச்சியர்; திருவின் பெட்பினர்

அமைச்சர்கள் :

—அந்தம் இல்

அறிவ ! வணங்கினோம்; அரச கைதொழுதெனோம்

தயரதன் :

உன்னிய அரும்பெறல் உறுதி ஒன்று உளது
என் உணர்வு அனைய நீர் இனிது கேட்டிரால்;

வெய்யவன் குலமுதல் வேந்தர் மேலவர்;
செய்கையின் ஒருமுறை திறம்பல் இன்றியே,
வையம் என் புயத்திடை நுங்கள் மாட்சியால்
ஐயம் இல் அறுபதினாயிரம் அரோ !

விரும்பிய மூப்பு எனும் வீடு கண்டயான்
இருமபியல் அனந்தனும் இசைந்த யானையும்
பெரும் பெயர்க் கிரிகளும் பெயர, தாங்கிய
அரும்பொறை இனிச்சிறிது ஆற்ற ஆற்றலேன்.

பஞ்சி மெல் தளிர் அடிப் பாவை கோல் கொள
வெஞ்சினத்து அவுணர் தேர் பத்துப் வென்றுளேற்கு
எஞ்சல் இல் மனம் எனும் இழுதை ஏறிய
அஞ்சுதேர் வெல்லும் ஈது அருமை ஆவதோ,

உம்மையான் உடைமையின் உலகம் யாவை!
செம்மையின் ஓம்பிநல் அறமும் செய்தனென்
இம்மையின் உதவி, நல் இசை நடாய நீர்,
அம்மையும் உதவுதற்கு அமைய வேண்டுமால்

மைந்தரை இன்மையின் வரம்பில் காலமும்
நொந்தனன் இராமன்என் நோவை நீக்குவான்
வந்தனன்; இனிஅவன் வருந்த யான் பிழைத்து
உய்ந்தனென் போவது ஓர் உறுதி எண்ணினேன்

பெருமகன் என்வயின் பிறக்க சீதைஆம்
திருமகள் மணவினை தெரியக் கண்டயான்
அருமகன் நிறைகுணத்து அவனிமாது எனும்
ஒருமகள் மணமும் கண்டு உவப்ப உன்னினேன்.

ஆதலால் இராமனுக்கு அரசை நல்கி இப்
பேதைமைத்தாய் வரும் பிறப்பை நீக்குறும்
மாதவம் தொடங்குவான் வனத்தை நண்ணுவேன்
யாது நும் கருத்து ?—

வசிட்டன் :

நிருப ! நின் குல மன்னவர் நேமி பண்டு உருட்டிப்
பெருமை எய்தினர்; யாவரே இராமனைப் பெற்றார்.
கருமமும் இது: கற்று உணர்ந்தோய்க்கு இனிக் கடவ
தருமமும் இது தக்கதே உரைத்தனை; தகவோய்!

மனிதர், வானவர், மற்றுளோர் அற்றம் காத்து அளிப்பான்
இனிய மன்னுயிர்க்கு இராமனின் சிறந்தவர் இல்லை:
அனையது ஆதலின், அரச! நிற்கு உறுபொருள் அறியின்
புனித மாதவம் அல்லது ஒன்று இல்.—

தயரதன் :

(முனிவன் மாமலர்ப்பதங்கள் முறைமையின் இறைஞ்சி)

பழுதுஇல் மாதவ! மகனைப்
பெற்ற அன்றினும், பிஞ்ஞகன் பிடித்த அப்பெருவில்
இற்ற அன்றினும், எறி மழுவாளவன் இழுக்க
உற்ற அன்றினும் பெரியது ஓர் உவகையன் ஆனேன்

இனிய சொல்லினை; எம்பெருமான் அருள் அன்றோ,
தனியன் நானிலம் தாங்கியது? அவற்கு இது தகாதோ?

எந்தை நீ உவந்து இதம்சொல, எம்குலத்து அரசர்,
அந்தம்இல் அரும்பெரும்புகழ் அவனியில் நிறுவி
முந்து வேள்வியும் முடித்து தம் இருவினை முடித்தார்
வந்தது அவ்வருள் எனக்கும்—

சுமந்திரன் :

(மந்திரக் கிழவர் தம் முக்த்தால் எழுதி நீட்டிய
இங்கிதம் வாங்கி கை தொழுது)

'உறந்தகும் அரசு இராமற்கு' என்று உவக்கின்ற மனத்தை
'துறத்திநீ' எனும்சொல்சுடும்; நின்குலத் தொல்லோர்
மறுத்தல் செய்கிலாத் தருமத்தை மறப்பதும் வழக்கு அன்று;
அறத்தின் ஊங்கு இனிக் கொடிது எனல் ஆவது ஒன்று யாதோ?

புரைசை மாக்கரி நிருபர்க்கும், புரத்து உறைவோர்க்கும்
உரைசெய் மந்திரக் கிழவர்க்கும், முனிவர்க்கும், உள்ளம்
முரைசம் ஆர்ப்ப நின் முதல் மணிப்புதல்வனை, முறையால்
அரசன் ஆக்கி, பின் அப்புறத்து அடுத்தது புரிவாய்!

தயரதன் :

நன்று சொல்லினை; நம்பியை நளிமுடி சூட்டி—
நின்று, நின்றது செய்வது விரைவினில், நீயே
சென்று, கொண்டு அணை, திருமகள் கொழுநனை—
[சுமந்திரன் விலங்கல் மாளிகை
வீதியில் விரைவொடு சென்று
இராகவன் திருமனை புக்கு
உண்டு ஓர் காரியம் வருகஎன
உரைக்க, புண்டரிகக்கண் புரவலன்—தூயதம்பியுடன்
போந்தனன் வரன்முறை வணங்கிட]

தயரதன் :

(இராமனை அன்புற நோக்கி)
பூண்ட போர் மழுஉடையவன் பெரும்புகழ் குறுக
நீண்ட தோள் ஐய! நிற் பயந்தெடுத்த யான், நின்னை
வேண்டி எய்திட விழைவது ஒன்று உளது —

ஐய! சாலவும் அலசிமினென்; அரும்பெரு மூப்பும்
மெய்யது ஆயது; வியல் இடப்பெரும் பரம் வசித்த
தொய்யல் மாநிலச் சுமை உறுசிறை துறந்து, இனியான்
உய்யல் ஆவது ஓர்நெறி புக உதவிட வேண்டும்.

மைந்த! நம்குல மரபினில் மணிமுடி வேந்தர்,
தம் தம் மக்களே கடன்முறை நெடுநிலம் தாங்க,
ஐந்தொடு ஆகிய முப்பகை மருங்கு அற அகற்றி.
உய்ந்து போயினர்; ஊழிநின்று எண்ணினும் உலவார்.

மன்னர் ஆனவர் அல்லர்; மேல் வானவர்க்கு அரசுஆம்
பொன்னின் வார்கழல் புரந்தனன் போலியர் அல்லர்;
பின்னும், மாதவம் தொடங்கி நோன்பு இழைத்தவர் அல்லர்;
சொல்மறா மகப் பெற்றவர் அருந்துயர் துறந்தார்.

அனையது ஆதலின், அருந்துயர்ப் பெரும் பரம், அரசன்
வினையின் என்வயின் வைத்தனன்' எனக்கொள வேண்டா;
புனையும் மா முடி புனைந்து இந்தநல் அறம் புரக்க
நினையல் வேண்டும் யான் நின்வயின் பெறுவது ஈது—

இராமன் :

(காதல் உற்றிலன் இகழ்ந்திலன்)
கடன் இது!
யாது கொற்றவன் ஏவியது அது, செயல் அன்றோ—
நீதி எதற்கு?

தயரதன் :

(இராமனை உயிர் உறத் தழுவி)
தருதி இவ்வரம்!
(வசிட்டனை நோக்கி)
நன்று சித்திர நளிர்முடி கவித்தற்கு, நல்லோய்
சென்று, வேண்டுவ வரன்முறை அமைக்க
(சுற்றியிருந்த வெற்றி வேந்தரை நோக்கி)
நிருபர்! கேன்மின்கள், இராமற்கு நெறிமுறைமையினால்
திருவும் பூமியும் சீதையின் சிறந்தன.
வென்றி வேந்தரீர்! இலச்சினை போக்குக.

நிருபரில் ஒருவர் :

(முறை முறை தொழுது)

அத்த! நன்று! யாம் ஒத்தசிந்தையர்;

மூ-எழு முறைமை எம்குலங்கள் முற்றுறப்
பூ எழு மழுவினால் பொருது போக்கிய
சேவகன் சேவகம் செகுத்த சேவகற்கு ;
ஆவ இவ் உலகம்; ஈது அறன்.

தயரதன் :

மகன் வயின் அன்பினால் மயங்கி யான் இது
புகல, நீர் புகன்ற இப்பொம்மல் வாசகம்
உவகையின் மொழிந்ததோ ? உள்ளம் நோக்கியோ ?
தகவு என நினைந்ததோ ? தன்மை யாது ?

நிருபரில் மற்றொருவர் :

செவ்வியோய் ! நின் திருமகற்குத் தேயத்தோர்
அவ்வவர்க்கு அவ்வவர் ஆற்ற ஆற்றும்
எவ்வம் இல் அன்பினை இனிது கேள் —

தானமும், தருமமும், தகவும், தன்மை சேர்
ஞானமும், நல்லவர்ப் பேணும் நன்மையும் —
மானவ ! வையம், நின்மகற்கு, வைகலும்
ஈனம்இல் செல்வம் வந்து இயைக என்னவே.

வேறொருவர் :

ஊருணி நிறையவும் உதவும் மாடுஉயர்
பார்கெழு பயன்மரம் பழுத்தற்று ஆகவும்,
கார் மழை பொழியவும், கழனிபாய் நதி
வார்புனல் பெருகவும், மறுக்கின்றார்கள் யார் ?

பிறிதொருவர் :

பனைஅவாம் நெடுங் கரப் பெரும யானையாய் !
நினைஅவாம் தன்மையை ! நிமிர்ந்த மன்னுயிர்க்கு,
எனையவாறு அன்பினன் இராமன், ஈண்டு, அவற்கு
அனையவாறு அன்பின அவையும் —

தயரதன் :

(களிக்கும் சிந்தையனாய்)
கழிந்தது என் இடர்.

செம்மையின், தருமத்தின், செயலின், தீங்கின்பால்
வெம்மையின் ஒழுக்கத்தின் மெய்ம்மை மேவினீர்,
என்மகன் என்பது என்? நெறியின், ஈங்கு, இவன்
நும்மகன்; கையடை; நோக்கும் ஈங்கு.

(நினைவாளனை நோக்கி)

உரைதெரி கணிதர்ீர் !
வடிமழுவாளற் கடந்த மைந்தர்க்கு
முடிபுனை முதன்மை நாள் மொழிமின் !

கணிதர் :

பொருந்து நாள் நாளை நின் புதல்வற்கு.

தயரதன் :

(சுமந்திரனை நோக்கி)
ஏவுக வள்ளுவர் ; இராமன் நாளையே
பூமகள் கொழுநனாய் ; புனையும் மௌலி : இக்
கோநகர் அணிக ; எனக் கொட்டுவ !

(வசிட்டனை நோக்கித் தொழுது)
பிழைப்பு இல் செய்தவ மருந்துஅனாய் !
நல் இயல் மங்கல நாளும நாளை ; அவ்
வில் இயல் தோளவற்கு ஈண்டு, வேண்டுவ
ஒல்லையின் இயற்றி, நல் உறுதி வாய்மையும
சொல்லுதி பொருது.

வசிட்டன் :

(உவகையும் தானும் முந்துற)
புகு காதல் புரவலன் ; போர் வலாய் !
நல்கும் நானிலம் நாளை ; நினக்கு — நான்
ஒன்று கூறுவது உண்டு, உறுதிப் பொருள் ;
நன்று கேட்டு, கடைப்பிடி நன்கு.

இராமன் :

ஒல்கல் இல்தவத்து உத்தம ஓதுக!

வசிட்டன் :

ஓதுநூல் மல்கு கேள்விய வள்ளலே!
கரிய மாலினும், கண்ணுதலானினும்,
உரிய தாமரைமேல் உறைவானினும்,
விரியும் பூதம் ஓர் ஐந்தினும், மெய்யினும்,
பெரியர் அந்தணர், பேணுதி உள்ளத்தால்.

உருளும் நேமியும், ஒண்கவர் எஃகமும்
மருள்இல் வாணியும், வல்லவர் மூவர்க்கும் ;
தெருளும் நல் அறமும், மனச் செம்மையும்,
அருளும், நீத்தபின், ஆவது உண்டாகுமோ ?

சூது முந்துறச் சொல்லிய மாத்துயர்,
நீதிமைந்த ! நினக்கு இலை ஆயினும்,
ஏதம் என்பன யாவையும் ஏய்துதற்கு
ஓதும் மூலம் அவை என ஓர்தியே.

யாரொடும் பகை கொள்ளலன் என்ற பின்,
போர் ஒடுங்கும் ; புகழ் ஒடுங்காது ; தன்
தார் ஒடுங்கல் செல்லாது ; அது தந்த பின்
வேரொடும் கெடல் வேண்டல் உண்டாகுமோ ?

கோளும் ஐம்பொறியும் குறைய, பொருள்
நாளும் கண்டு, நடுக்குறு நோன்மையின்
ஆளும் அவ் வரசே அரசு ; அன்னது
வாளின் மேல் வருமாதவம் மைந்தனே !

உமைக்கும் நாதற்கும், ஓங்குபுள் ஊர்திக்கும்,
இமைப்பு இல் நாட்டம் ஓர் எட்டு உடையானுக்கும்,
சமைத்த தோள் வலி தாங்கினர் ஆயினும்,
அமைச்சர் சொல்வழி ஆற்றுதல் ஆற்றலே !

என்பு தோல் உடையார்க்கும் இலார்க்கும், தம்
வன் பகைப் புலன் மாசு உற மாய்ப்பது என் ?
முன்பு பின்பு இன்றி, மூவுலகத்தினும்
அன்பின் நல்லது ஓர் ஆக்கம் உண்டாகுமோ ?

'இனிய சொல்லினன் ; ஈகையன் ; எண்ணினன் ;
வினையன் ; தூயன் ; விழுமியன் ; வென்றியன் ;
நினையும் நீதி நெறி கடவான் எனில்
அனைய மன்னற்கு அழிவும் உண்டாங் கொலோ ?

சீலம் அல்லன நீக்கி, செம்பொன் துலைத்
தாலம் அன்ன தனி நிலை தாங்கிய
ஞால மன்னற்கு, நல்லவர் நோக்கிய
காலம அல்லது கண்ணும் உண்டாகுமோ ?

"ஓர்வுஇல் நல்வினை ஊற்றத்தினார் உரை,
பேர்வுஇல் தொல்விதி பெற்று உளது" என்று அரோ
தீர்வுஇல் அன்பு செலுத்தலின், செவ்வியோர்
ஆர்வம் மன்னவற்கு ஆயுதம் ஆவதே.

தூ மகேது புவிக்கு எனத் தோன்றிய
வாம மேகலை மங்கையரால் வரும்
காமம் இல்லை எனின், கடுங்கேடு எனும்
நாமம் இல்லை ; நரகமும் இல்லையே !

[இராமன் வணங்கிட, வசிட்டன் அவனொடு திருமால் கோயில் புக்கு வணங்கினர்]

வள்ளுவர் :

இராமன நாளையே
பூமகள் கொழுநனாய், புனையும் மௌலி; இக்
கோ நகர் அணிக;

## காட்சி—2

இடம் : கோசலை அரண்மனை.

இருப்போர் : கோசலை, சுமித்திரை, தோழியர் நால்வர், வசிட்டன், இராமன். (மகளிர் நால்வர் ; ஆடியவண்ணம்)

கோசலை :

மங்கையர் நால்வரீர் !
ஆடுகின்றீர் பண் அடைவு இன்றியே
பாடுகின்றீர் பார்த்தவர்க்கே கரம்
சூடுகின்றீர் ; சொல்லுவது ஓர்கிலீர்

மங்கையர் நால்வர் :

கொண்டல் வண்ணனை நல்கிய கோசலை !

கோசலை .

உண்டுபேர் உவகைப் பொருள் அன்னது
தொண்டை வாயினிர் ! சொல்லுமின் ஈண்டு !

ஒருத்தி :

மன்நெடும கழல் வந்து வணங்கிட
பல் நெடும் பகல்பார் அளிப்பாய் என.
நின் நெடும் புதல்வனதனை நேமியான்
தொல் நெடும்முடி சூட்டுகின்றான்.

கோசலை :

(தனக்குள் உவகையுடன்)
'சிறக்கும் செல்வம் மகற்கு!'
சிந்தையில் பிறக்கும் பேர் உவகைக் கடல் பெட்பு அற
(தயககத்துடன் தனக்குள்)

துறக்கும் மன்னவன் என்னும் துணுக்கம்,
அப்பேர் உவகைக் கடல்
வறக்கும் மா வடவைக் கடல் ஆனதே !
அரும்பெறல் ஆரமும்,
நல்நிதிக் குவையும் நனி நல்கினென்;

(துன்னுகாதல் சுமித்திரையொடும் திருமாலின் சிலையை மேவி)

மின்னும் நேமிய
என் வயின் தரும் மைந்தர்க்கு இனி அருள்
உன் வயத்தது.

(சுமித்திரையை நோக்கி)

சுமித்திரை! இந்திரை கேள்வனுக்கு
ஊனறும் நான்மறை ஓதிய பூசனை
நனறு இழைத்து, அவன் நல்லதவர்க்கு எலாம்,
கன்றுடைப் பசுவின் கடல் நல்குதும் !

## காட்சி—3

இடம் : கைகேயி மாளிகை.

இருப்போர் : மந்தரை, கைகேயி, தயரதன், தாதியர் முதலானோர்.

**[கைகேயியின் மாளிகை முன்னிலையில் மகளிர் ஆடுகின்றனர்; ஒருத்தி மந்தரையை அணுகி]**

ஒருத்தி :

கொடு மனக் கூனியே !
கவி அமை கீர்த்தி அக்காளை, நாளையே
புவி அமை மணி முடி புனையும்.

மந்தரை :

ஆர்த்தீர் ; களித்தீர் ; ஆடிப்பாடிவிர்
வேர்த்தீர் ; தடித்தீர் ; சிலிர்த்து மெய்ம்மயிர்
போர்த்தீர் ; மன்னனைப் புகழ்ந்து வாழ்த்திவிர்.

கவி அமை கீர்த்தி அக்காளை நாளையே
புவிஅமை மணிமுடி புனையும்' என்ற சொல்
செவி அமை நுகர்ச்சியது எனினும், தேவர் தம்
அவி அமுது ஆனதோ? இந்நகர் உளார்க்கு எலாம்?
— எற்கு செவியினில் கைத்திடும்?

தாதி :

தோன்றிய கூனியே ! துடிக்கும் நெஞ்சினாய் !
ஊன்றிய வெகுளியாய்! உளைக்கும் உள்ளத்தாய்!
கான்று எரி நயனத்தாய்! கதிக்கும் சொல்லினாய்!
மூன்று உலகினுக்கும் ஓர் இடுக்கண் மூட்டுவாய் !

மந்தரை :

பண்டை நாள் இராகவன் பாணி வில் உமிழ்
உண்டை உண்டதனை ஏன் உள்ளத்து உள்ளினன்

(இவ்வண்ணம் இயம்பி கேகயன் மடந்தை
ஏடு அவிழ் நொய்து அலர் தாமரை நோற்ற
நோன்பினால் செய்த பேர் உவமைசால் செம்பொன்
சீறடி கைகளின் தீண்டி)

தொண்டைவாய்க் கேகயன் தோகையே!
(அத்தெய்வக் கற்பினாள் நீண்ட கண்
அனந்தரும் நீங்கிற்றிலள்)

அணங்கு, வாள்விட அரா அணுகும் எல்லையும்
குணம் கெடாது ஒளி விரி குளிர்வெண் திங்கள் போல்,
பிணங்கு வான் பேர் இடர் பிணிக்க நண்ணவும்
உணங்குவாய் அல்லை; நீ உறங்குவாய்.—

கைகேயி :

தென் அடு சிலைக் கை என் சிறுவர் செவ்வியர்;
அவ் அவர் துறை தொறும் அறம் திறம்பலர்;
எவ் இடர் எனக்கு வந்து அடுப்பது ஈண்டு ?
பராவ அரும் புதல்வரைப் பயக்க, யாவரும்
உராவ அருந் துயரைவிட்டு, உறுதி காண்பரால் :
விராவ அரும் புவிக்கு எலாம் வேதமே அன
இராமனைப் பயந்த எற்கு இடர் உண்டோ ? —

மந்தரை :

வீழ்ந்தது நின் நலம் ; திருவும் வீந்தது ;
வாழ்ந்தனள் கோசலை, மதியினால்.

கைகேயி :

மன்னவர் மன்னனேல் கணவன், மைந்தனேல்
பன்ன அரும்பெரும் புகழ்ப் பரதன் ; பார்தனில்
என்இதன் மேல் அவட்கு எய்தும் வாழ்வு ?

மந்தரை :

ஆடவர் நகை உற, ஆண்மை மாசு உற,
தாடகை எனும்பெயர்த் தையலாள்பட
கோடிய வரி சிலை இராமன் கோமுடி,
சூடுவன் நாளை வாழ்வு இது —

கைகேயி :

உவகை போய் மிக்கது! நிற்கு
சுடர்க்கு எலாம் நாயகம் அனையது ஓர் மாலை நல்கினென்
(மந்தரைக்குப் பொன் மாலை தர)

மந்தரை :

(சிறுகண் தீ உக விழித்து வெய்து உயிர்த்து வெகுண்டு நோக்கி, மாலையால் கொழித்தனள் நிலத்தை)
வேற்றுமை உற்றிலை ! வீரன் தாதை புக்கு
ஏற்று நின் இருதயத்து இருந்தனன் கொலாம் !
பேதை நீ பிதி பித்தி ; நிற்-பிறந்த சேயொடும்

நீ துயர் படுக ; நான் நெடிது உன் மாற்றவள்
தாதியர்க்கு ஆட்செயத் தரிக்கிலேன் —

சிவந்த வாய்ச் சீதையும் கரிய செம்மலும்
நிவந்த ஆசனத்து இனிது இருப்ப, நின்மகன்
அவந்தனாய், வெறு நிலத்து இருக்கல் ஆன போது,
உவந்த வாறு என் ? இதற்கு உறுதி யாது ?

மறந்திலள் கோசலை உறுதி ; மைந்தனும்
சிறந்தநல் திருவினின் திருவும் எய்தினான்,
இறந்திலன் இருந்தனன் ; என் செய்து ஆற்றுவான்!
பிறந்திலன் பரதன் : நீ பெற்றதால் ! —

சரதம் இப்புவி எலாம், தம்பி யொடும் இவ்
வரதனே காக்குமேல், வரம்பு இல் காலமும்,
பரதனும் இளவலும், பதியின் நீங்கிப் போய்
விரத மாதவம் செய விடுதல் நன்று —

பண்ணுறு கட கரிப் பரதன், பார்மகள்
கண்ணுறு கவினராய் இனிது காத்த அம்
மண்ணுறு முரசுடை மன்னர் மாலையில்
எண்ணுறப் பிறந்திலன் ; இறத்தல் நன்று.

பாக்கியம் புரிந்திலாப் பரதன் தன்னை, பண்டு
ஆக்கிய பொலங் கழல் அரசன், ஆணையால்
தேக்கு உயர்கல் அதர், கடிது சேணிடைப்
போக்கிய பொருள் எனக்குப் போந்ததால்.

கைகேயி :

மந்தரை வாய் கயப்புற வழங்கினை வெம்சொல்

மந்தரை :

பின்னரும் வகைந்து கூறுவென் :
அந்தரம் தீர்ந்து உலகு அளிக்கும் நீரினால்
தந்தையும் கொடியன் ; நல்தாயும் தீயளால்,
எந்தையே! பரதனே ! என் செய்வாய் ? —

அரசர் இல் பிறந்து, பின் அரசர் இல் வளர்ந்து,
அரசர் இல் புகுந்து, பேர் அரசி ஆன நீ
கரை செயற்கு அருந்துயர்க் கடலில் வீழ்கின்றாய் ;
உரை செயக் கேட்கிலை உணர்தியோ? —

கல்வியும் இளமையும் கணக்கில் ஆற்றலும்
வில்வினை உரிமையும், அழகும், வீரமும்,
எல்லை இல் குணங்களும். பரதற்கு எய்திய !
புல்லிடை உகுத்த அமுது ஏயும் போல் —

கைகேயி :

(கயல் கண்கள் சிவப்புற நோக்கி)

தெழித்தனை ; உரப்பினை ; சிறுகண் தீவுக
விழித்தனை ; வைதனை ; வெய்து உயர்த்தனை
அழிக்தனை ; அழுதனை ; அம் பொன் மாலையால்
குழித்தனை நிலத்தை ; கொடிய கூனியே !

வெயில் முறைக் குலக் கதிரவன் முதலிய மேலோர்
உயிர் முதல் பொருள் திறம்பினும் உரை திறம்பாதோர் ;
மயில் முறைக் குலத்து உரிமையை மனு முதல் மரபை ;
செயிர் உற, புலைச் சிந்தையால் என் சொனாய் ? தீயோய் !

எனக்கு நல்லையும் அல்லை நீ : என் மகன் பரதன் —
தனக்கு நல்லையும் அல்லை ; அத் தருமமே நோக்கின்
உனக்கு நல்லையும் அல்லை ; வந்து ஊழ்வினை தூண்ட,
மனக்கு நல்லன சொல்லினை — மதியிலா மனத்தோய் !

பிறந்து இறந்து போய்ப் பெறுவதும், இழப்பதும், புகழே ;
நிறம் திறம்பினும், நியாயமே திறம்பினும், நெறியின்
திறம் திறம்பினும், செய்தவம் திறம்பினும், செயிர்தீர்
மறம் திறம்பினும், வரன்முறை திறம்புதல் வழக்கோ ?

போதி, என் எதிர் நின்று ; நின் புன் பொறி நாவைச்
சேதியாது இது பொறுத்தனன் ; புறம் சிலர் அறியின்,
நீதி அல்லவும், நெறி முறை அல்லவும், நினைந்தாய்
ஆதி ; ஆதலின், அறிவு இலி ! அடங்குதி —

மந்தரை : (அஞ்சி)

தஞ்சமே ! உனக்கு உறுபொருள் உணர்த்துகை தவிரேன் ;
வஞ்சி போலி !
(கைகேயி அடிமிசை வீழ்ந்து)

அறன் நிரம்பிய அருளுடை அருந்தவர்க் கேனும்.
பெறல் அருந் திருப் பெற்றபின், சிந்தனை பிறிது ஆம்;
மறம் நினைந்து உமை வலிகிலிர் ஆயினும் மனத்தால்
இறல் உறும்படி இயற்றுவர், இடையறா இன்னல்

புரியும் தன் மகன் அரச எனின், பூதலம் எல்லாம்
விரியும் சிந்தனைக் கோசலைக்கு உடைமை ஆம்; என்றால்,
பரியும் நின் குலப் புதல்வற்கும், நினக்கும், இப்பார் மேல்
உரியது என், அவன் உதவிய ஒரு பொருள் அல்லல்!

தூண்டும் இன்னலும், வறுமையும் தொடர்தரத் துயரால்
ஈண்டுவந்து உனை இரந்தவர்க்கு, இருநிதி, அவளை
வேண்டி ஈதியோ? வெள்குதியோ? விம்மல் நோயால்
மாண்டு போதியோ? மறுத்தியோ? எங்ஙனம் வாழ்தி?

சிந்தை என் செயத் திகைத்தனை? இனி, சில நாளில்
தம்தம் இன்மையும் எளிமையும், நிற்கொண்டு தவிர்க்க,
உந்தை, உன் ஐ, உன் கிளைஞர், மற்றுஉன் குலத்து உள்ளோர்,
வந்து காண்பது உன் மாற்றவள் செல்வமோ? மதியாய்!

காதல் உன் பெருங் கணவனை அஞ்சி, அக்கனிவாய்ச்
சீதை தந்தை, உன் தாதையைத் தெறுகிலன்; இராமன்
மாதுலன் அவன். நுந்தைக்கு வாழ்வு இனி உண்டோ?
பேதை! உன் துணையார் உளர் பழிபடப் பிறந்தார்?

மற்றும் நுந்தைக்கு வான் பகை பெரிது உள; மறத்தார்
செற்றபோது, இவர் சென்று உதவார் எனின், செருவில்
கொற்றம் என்பது ஒன்று, எவ்வழி உண்டு? அது கூறாய்!
சுற்றமும் கெட, சுடு துயர்க்கடல் விழத் துணிந்தாய்!

கெடுத்து ஒழிந்தனை உனக்கு அரும்புதல்வனை; கிளர்நீர்
உடுத்த பாரகம் உடையவன், ஒருமகற்கு எனவே
கொடுத்த பேர் அரசு, அவன் குலக் கோமைந்தர் தமக்கும்,
அடுத்த தம்பிக்கும் ஆம்; பிறர்க்கும் ஆகுமோ?

(தீய மந்தரை இவ் உரை செப்பலும், தேவி
தூய சிந்தையும் திரிந்தது; சூழ்ச்சியின் இமையோர்
மாயையும், அவர் பெற்ற நல்வரம் உண்மையாலும்
ஆய அந்தணர் இயற்றிய அருந்தவத்தாலும்)

கைகேயி :

வினை நிரம்பிய கூனி! நினை விரும்பினென்—
எனை உவந்தனை: இனியை என்மகனுக்கும்; அனையாளை
அனையான் புனையும் நீள்முடி பெறும்படி புகலுதி

மந்தரை :

மாழை ஒண் கணி!
என் தோழி வல்லள் ! என்துணை வல்லள்
(என்று அடி தொழுதாள்)
தாழும் மன்நிலை; என் உரை தலைநிற்பின், உலகம்
ஏழும் ஏழும் உன் மகற்கு ஆக்குவென்!
நாடி ஒன்று உனக்கு உரைசெய்வென்; நளிர்மணி நகையாய்
தோடு இவர்ந்த தார்ச்சம்பரன் தொலையுற்ற வேலை;
ஆடல் வென்றியான் அருளிய வரம் அவை இரண்டும்
கோடி—
இருவரத்தினில் ஒன்றினால் அரசு கொண்டு, இராமன்
பெரு வனத்திடை ஏழ் - இரு பருவங்கள் பெயர்ந்து
திரி தரச் செய்தி, ஒன்றினால்; செழுநிலம் எல்லாம்
ஒரு வழிப் படும் உன் மகற்கு; உபாயம் ஈது—

கைகேயி :

(கூனியை உயிர் உறத் தழுவி)
நிரைத்த மாமணி ஆரமும் நிதியமும் பெறுதி,
இரைத்த வேலை சூழ் உலகம் என் ஒரு மகற்கு ஈந்தாய்,
தரைக்கு நாயகன் தாய் இனி நீ !—
நன்று சொல்லினை; நம்பியை நளிர்முடி சூட்டல்;
துன்று கானத்தில் இராமனைத் துரத்தல்; இவ்விரண்டும்
அன்றது ஆம் எனில், அரசன் முன் ஆர் உயிர் துறந்து
பொன்றி நீங்குதல் புரிவென் யான்; போதிநீ !—

மந்தரை :

குலமலர்க் குப்பை நின்று இழிக
சோனை வார்குழல் கற்றையில் சொருகிய மாலை
வான மாமழை நுழைதரும் மதி பிதிர்ப்பாய் போல்
தேன் அவாவுறு வண்டினம் அலமர சிதை;

கிளைகொள் மேகலை சிந்துக; கிண்கிணியோடும்
வளை துறந்திடுக;
அளக வாள்நுதல் அரும்பெறல் திலகமும் அழித்திடுதி!

கைகேயி :

(தா இல் மாமணிககலம் மற்றும் தனிதனி சிதறி
நாவி ஓதியை நானிலம் தைவரப் பரப்பி,
காவி உண்கண் அஞ்சனம் கான்றிடக் கலுழா,
பூ உதிர்ந்தது ஓர் கொம்பு எனப் புலமிசைப் புரண்டாள்)
(ஆழி நெடுங் கை மடங்கல் ஆளி அன்னான் ஆயிழை தன்னை
அடைந்தனன்)

வாயில் காப்போர் :

ஆழி மன்னன் வாழிய !

தயரதன் :

(கைகேயியை நோக்கி, தனக்குள்)
அரந்தை என்கொல் வந்து தொடர்ந்தது?
(மடந்தையைத் தழீஇ எடுக்கலுற்றான்—கைகேயி,
நின்று தொடர்ந்த நெடுங்கை தம்மை நீக்கி
மின் துவள்கின்றது போல, மண்ணில் வீழ்ந்தாள்
மன்னன் அஞ்சி)
என்னை நிகழ்ந்தது ? இவ்ஏழு ஞாலம் வாழ்வார்
உன்னை இகழ்ந்தவர் மாள்வர் ; உற்றது எல்லாம்
சொன்னபின் என்செயல் காண்டி ; சொல்லிடு —

கைகேயி :

(நெடுங்கணின் ஆலி கோர்ப்ப)
உண்டு கொலாம் அருள் என் கண் ? உன் கண் ஓக்கின்
பண்டைய இன்று பரிந்து அளித்தி—

தயரதன் :

(மின்னின் மின்ன நக்கான்)
உள்ளம் உவந்துள செய்வன் ; ஒன்றும் உலோவேன்
வள்ளல் இராமன் உன் மைந்தன் ஆணை —
அன்னம் அன்னாய் !

கைகேயி :

தோன்றிய பேர் அவலம் துடைத்தல் உண்டேல்
சான்று இமையோர் குலம் ஆக, மன்ன ! நீ அன்று
ஏன்ற வரங்கள் இரண்டும் ஈதி !

தயரதன் :

வரம்கொள இத்துணை மன்னும் அல்லல் எய்தி
இரங்கிட வேண்டுவது இல்லை ; ஈவென் ; என்பால்
பரம்கெட இப்பொழுதே பகர்ந்திடு ! —

கைகேயி :

ஏய வரங்கள் இரண்டின், ஒன்றினால், என்
சேய் உலகு ஆள்வது ; சீதை கேள்வன் ஒன்றால்
போய் வனம் ஆள்வது !—

தயரதன் :

(கம்ப நெடுங்களி யானை மன்னவன், வேகம் அடங்கிய
வேழம் என்ன வீழ்ந்தான் ; வேதனை முற்றிட வெந்து வெந்து
கொல்லன் ஊது உலையில் கனல் என்ன வெய்து உயிர்த்தான்;
நா உலர உயிர் ஓட, உள்ளம் புலர, கண்கள் பொடிக்க,
ஆவி பதைப்ப, அலக்கண் எய்தி)
(தனக்குள்) தக்கது என் கொல் ?
பெண் என உட்கினேன்; பெரும்பழிக்கு நாணினேன்!
இவள் நாண் இலள்!
(உரக்க) உரம் கொள் மனத்தி!
தீயவை யாவினும் சிறந்த தீயளே!
இந்நிலை நின்றனை!—நீ திசைத்தது உண்டோ?
பொய்ந் நிலையோர்கள் புணர்த்த வஞ்சம் உண்டோ?
உன் நிலை சொல்; எனது ஆணை உண்மை!

கைகேயி :

திசைத்ததும் இல்லை; எனக்கு வந்து தீயோர்
இசைத்ததும் இல்லை; முன் ஈந்த இவ் வரங்கள்
குசைப் பரியோய்! தரின் இன்று கொள்வென்; அன்றேல்
வசைத் திறன் நின்வயின் நிற்க மாள்வென் —

தயரதன் :

(சிந்தை திரிந்து திகைத்து அயர்ந்து வீழ்ந்து)
ஆ கொடியாய்!
அந்தோ ஓ கொடிதே அறம்!
உண்மை ஒன்றும் சாக !
(மெய் தள்ளாடி வீழ)

'நாரியர் இல்லை இஞ்ஞாலம் எங்கும்' என்ன
கூரிய வாள்கொடு கொன்று நீக்கி, யானும்,
பூரியர் எண்ணிடை வீழ்வென்!
(கையொடு கையைப் புடைத்து, வாய் கடித்து)
மெய்யுரை குற்றம்!
(புழுங்கி, விம்மி, நெஞ்சு அழிந்து சோர்ந்து)
(தனக்குள்) ஒறுப்பினும் அந்தரம், உண்மை ஒன்றும் ஒவா
மறுப்பினும் அந்தரம் :—
பொறுப்பினும் இந்நிலை போகிலாளை வாளால்
இறுப்பினும் ஆவது அன்று; இரப்பென்.
கோல் மேற்கொண்டும் குற்றம் அகற்றக்
குறி கொண்டார்
போல், மேல் உற்றது உண்டு எனின் நன்று ஆம் பொறை.
(அவள் கால் மேல் வீழ்ந்து)

கொள்ளான் நின் சேய் இவ் அரசு; அன்னான் கொண்டாலுப்
நள்ளாது இந்த நானிலம்; ஞாலம் தனில் என்றும்
உள்ளார் எல்லாம் ஓத உவக்கும் புகழ் கொள்ளாய்;
எள்ளா நிற்கும் வன்பழி கொண்டு என் பயன்?

வானோர் கொள்ளார்' மன்னவர் உய்யார்; இனி, மற்று என்
ஏனோர் செய்கை? யாரொடு நீ இவ்அரசு ஆள்வாய்?
யானே சொல்ல, கொள்ள இசைந்தான், முறையாலே
தானே நல்கும் உன் மகனுக்கும் தரை

'கண்ணே வேண்டும்' என்னினும் ஈயக் கடவேன்; என்
உள்நேர் ஆவி வேண்டினும் இன்றே உனது அன்றோ?—
பெண்ணே! வன்மைக் கேயன் மானே!—பெறுவாயேல்
மண்ணே கொள்நீ; மற்றைய து ஒன்றும் மற—

வாய் தந்தேன் என்றேன்; இனி யானோ அது மாற்றேன்;
நோய் தந்து என்னை நோவன செய்து நுவலாதே
தாய் தந்தென்ன, தன்னை இரந்தால், தழல் வெங்கண்
பேய் தந்தியும்: நீ இது தந்தால் பிழை ஆமோ?

கைகேயி :

முன்னே தந்தாய் இவ்வரம்: நல்காய் முனிவாயேல்
என்னே? மன்னா ; யார் உளர் வாய்மைக்கு இனி?—

தயரதன் :

(ஆவி புழுங்க)

நச்சுத் தீயே பெண் உரு அன்றோ?

(இரந்து)

நின் மகன் ஆள்வான்: நீ, இனிது ஆள்வாய் நிலம் எல்லாம்
உன்வயம் ஆமே ; ஆளுதி; தந்தேன்: உரை குன்றேன் ;
என் மகன், என் கண், என் உயிர், எல்லா உயிர்கட்கும்
நன் மகன், இந்த நாடு இறவாமை நய—

மெய்யே; என்தன் வேர் அற நூறும் வினை நோக்கி
நையா நின்றேன்; நாவும் உலர்ந்தேன், நளினம் போல்
கையான், இன்று: என் கண் எதிர் நின்றும் கழிவானேல்
உய்யேன்! நங்காய்! உன் அபயம் என் உயிர்—

கைகேயி :

சரம் தாழ்வில்லாய்! தந்த வரத்தை, 'தவிர்க' என்றல்,
உரம் தான் அல்லால் நல் அறம் ஆமோ? உரை;

தயரதன் :

முடி சூடாமல் காத்தலும், மொய்கானிடை, மெய்யே
நெடியான் நீங்க, நீங்கும் என் ஆவி இனி.

(மண்ணில் வீழ்ந்து)

ஒன்றா நின்ற ஆர் உயிரோடும், உயர் கேள்வர்
பொன்றா முன்னம் பொன்றினர் என்னும் புகழ் அல்லால்
இன்று ஓர் காறும், எல் வளையார், தம் இறையோரைக்
கொன்றார் இல்லை; கொல்லுதியோ நீ? கொடியோளே!

ஏவம் பாராய்; இல் முறை நோக்காய்; அறம் எண்ணாய்;
'ஆ!' என்பாயோ அல்லை; மனத்தால் அருள் கொன்றாய்;
நா அம்பால், என் ஆர் உயிர் உண்டாய்; இனி, ஞாலம்
பாவம் பாராது, இன் உயிர் கொள்ளப் படுகின்றாய்!

ஏண்பால் ஓவா நாண், மடம், அச்சம், இவையே தம்
பூண்பால் ஆகக் காண்பவர் நல்லார்; புகழ் பேணி
நாண்பால் ஓரா நங்கையர் தம்பால் நணுகாரே;
ஆண்பாலாரே; பெண்பால் ஆரோடு அடைவு அம்மா?

மண் ஆள்கின்றார் ஆகி, வகைத்நால் மதியால் வைத்து
எண்ணா நின்றார் யாரையும், எல்லா இகலாலும்,
விண்ணோர் காறும், வென்ற எனக்கு, என் மனை வாழும்
பெண்ணால் வந்தது, அந்தரம் என்னப் பெறுவேனோ?
( என்று உன்னி இரங்கி மயங்கினான்)

கைகேயி :

பாழிப் பொன் தார் மன்னவ இவ்வாறு அயர்வு எய்தி
பூழிப் பொன் தோள் முற்றும் அடங்கப் புரள்கின்றாய்!
ஊழின் பெற்றாய் என்று உரை; இன்றேல் உயிர் மாய்வென்.

அரிந்தான், முன் ஓர் மன்னவன் அன்றே அருமேனி
வரிந்து ஆர் வில்லாய்! வாய்மை வளர்ப்பான்! வரம் நல்கி
பரிந்தால் என் ஆம்?

தயரதன் :

—பாயும் கனலேபோல்
எரிந்து ஆறாதே இன் உயிர் உண்ணும் எரி அன்னாய்!

ஈந்தேன்! ஈந்தேன்! இவ்வரம்; என் சேய் வனம் ஆள,
மாய்ந்தே நான் போய் வான் உலகு ஆள்வென்: வசைவெள்ளம்
நீந்தாய், நீந்தாய், நின் மகனொடும் நெடிது:—

(கூறா முன்னம் கூறுபடுக்கும் கொலை வாளின்
ஏறு ஆம் என்னும் வன்துயர் ஆகத்திடை மூழ்க
தேறான் ஆகிச் செய்கை மறந்தான்; செயல் முற்றி
ஊறா நின்ற சிந்தையினளும் துயில் உற்றாள்—

நளிர் கங்குல் கழிய, வெய்யவன் கோபம்
முற்றி மிகச் சிவந்தனன் குணக் குன்றிலே
கைகேயி துயில் எழ, பிணி அறநோக்கி நின்ற பெரியவன்,
விரைவின்ஏகி மணிமுடிவேந்தன் தன்னை வல்லையின்
கொணர்தி என்ன சுமந்திரன் வருகின்றான்)

சுமந்திரன் :

பெண்டிரில் சிறந்த தேவி!

பிணிஅற நோற்று நின்ற பெரியவன் விரைவின் ஏக
மணிமுடி வேந்தன் தன்னை வல்லையின் கொணர வந்தேன்

கைகேயி:

பிள்ளையைக் கொணர்க !

(சுமந்திரன் நீங்கினன உவகை பொங்க, பொன்திணிமாடவீதி புக்கனன்)

## காட்சி—4

இடம் : இராமனது மாளிகை, அதனை அடுத்து மாடவீதி.

இருப்போர் : சுமந்திரன், இராமன், ஊர் மக்கள்.

சுமந்திரன் :

குன்று இவர் தோளினாய் !

கொற்றவர், முனிவர், மற்றும் குவலயத்து உள்ளார், உன்னைப்
பெற்றவன் தன்னைப்போல, பெரும் பரிவு இயற்றி நின்றார் ;
சிற்றவைதானும், "ஆங்கே கொணர்க !" எனச் செப்பினாள்; அப்
பொன்-தட மகுடம் சூடப் போதுதி, விரைவின்—

(ஐயனும், அச் சொல் கேளா, ஆயிர மௌலியானைக்
கைதொழுது — தார்அணி தேரில் சென்றான்;
சுண்ணமும் மலரும் சாந்தும் கனகமும் தூவினர்
வண்ண மேகலையும் நாணும் வளைகளும் சிந்தினர்.)

மகளிரில் ஒருத்தி :

"அங்கணன் அவனி காத்தற்கு ஆம் இவன்" என்னல் ஆமோ ?
'நம் கண் அன்பு இலன்' என்று உள்ளம் தள்ளுற நடுங்கி நைவார்,
செங்கணும், கரிய கோல மேனியும், தேரும், ஆகி,
எங்கணும் தோன்றுகின்றான்; எனைவரோ இராமன் ?

முதிஞர் — ஒருவர் :

'உய்ந்தது இவ் வுலகம் ; — ஊழி காண்கிற்பாய் !'

மற்றவர் :

மைந்த ! நீ கோடி எங்கள் வாழ்க்கை நாள் யாவும் ;

வேறொருவர் :

ஐந்து அவித்து அரிதின் செய்த தவம் உனக்கு ஆக !

நான்காம் முதிஞர் :

பைந்துழாய்த் தெரியலாய்க்கே நல்வினை பயக்க !

ஐந்தாமவர் :

வாரணம் அரற்ற வந்து, கரா உயிர் மாற்றும் நேமி
நாரணன் ஒக்கும், இந்த நம்பிதன் கருணை

ஆறாம் முதியூர் :

நீல மாமுகில் அனான் தன் நிறையினோடு அறிவும் நிற்க
சீலம் ஆர்க்கு உண்டு ? கெட்டேன் ! தேவரின் அடங்குவானோ ?
காலமாக் கணிக்கும் நுண்மைக் கணக்கையும் கடந்து நின்ற
மூலம் ஆய், முடிவு இலாத மூர்த்தி இம் முன்பன்.

முதியூர் ஏழாமவர் :

சத்திரம் நிழற்ற, நிமிர் தானை யொடு நானா
அத்திரம் நிழற்ற, அருளோடு அவனி ஆள்வார்.
புத்திரர் இனிப் பெறுதல் புல்லிது.

இளைஞர் ஒருவர் :

பாவமும் அருந்துயரும் வேர் பறியும்

இளைஞர் — இரண்டாமவர் :

பூவலயம் இன்று தனி அன்று; பொது !

மூன்றாம் இளைஞன் :

தேவர் பகை உள்ளன; இவ் வள்ளல் தெறும் !

முதியூர் :

ஏவல் செய்யும் மன்னர் தவம் யாவது கொல் ?

(அடல்வீரன், நீண்ட கொடி மாட
நிறை வீதி நிறையப் போய் பூண்ட புகழ்
மன்னன் உறை கோயில் புக, தயரதனைக்
காணாது சிற்றவை கோயில் புக்கான்.)

## காட்சி—5

இடம் : கைகேயி மாளிகை.

இருப்போர் : கைகேயி, இராமன், தயரதன் முதலானோர்.

கைகேயி : (தனக்குள்)

நாயகன் உரையான் வாயால்; நாஇது பகர்வென்

இன்று எனக்கு உணர்த்தல் ஆவது ஏயதே என்னின், ஆகும்;
ஒன்று உனக்கு உந்தை, மைந்த ! உரைப்பது ஓர் உரை உண்டு—

இராமன் :

எந்தையே ஏவ, நீரே உரை செய இயைவது உண்டேல்
உய்ந்தனென் அடியேன்; என்னின் பிறந்தவர் உளரோ ? வாழி !
வந்தது என் தவத்தின் ஆய வருபயன்: மற்று ஒன்று உண்டோ ?
தந்தையும் தாயும் நீரே; தலைநின்றேன் பணிமின் !

கைகேயி :

ஆழி சூழ் உலகம் எல்லாம் பரதனே ஆள, நீ போய்,
தாழ் இருஞ் சடைகள் தாங்கி, தாங்க அருந் தவம் மேற்கொண்டு,
பூழி வெங் கானம் நண்ணி, புண்ணியத் துறைகள் ஆடி,
ஏழ்-இரண்டு ஆண்டின் வா, என்று இயம்பினன் அரசன் —

(இப்பொழுது எம்மனோரால் இயம்புதற்கு எளிதோ யாரும்
செப்ப அருங் குணத்து இராமன் திருமுகச் செவ்வி நோக்கின்
ஒப்பதே முன்பு பின்பு; அவ்வாசகம் உணரச் கேட்ட
அப்பொழுது அலர்ந்த செந்தாமரையினை வென்றது அம்மா)

இராமன் :

மன்னவன் பணி அன்றாகின், நும் பணி மறுப்பனோ ? என்
பின்னவன் பெற்ற செல்வம் அடியேன் பெற்றது அன்றோ ?
என் இனி உறுதி அப்பால் ? இப்பணி தலைமேல் கொண்டேன்;
மின் ஒளிர் கானம் இன்றே போகின்றேன்; விடையும் கொண்டேன்.

(அவள் அடி இணை இறைஞ்சி தன் துணை தாதை
பாதம் அத்திசை நோக்கித் தாழ்ந்து கோசலை கோயில்
புக்கான்)

## காட்சி—6

இடம் : கோசலையின் கோயில்.

இருப்போர் : கோசலை, இராமன்.

கோசலை :

(தனக்குள்)
குழைக்கின்ற கவரிஇன்றி, கொற்ற வெண்குடையும் இன்றி,
இழைக்கின்ற விதி முன் செல்ல, தருமம் பின் இரங்கி ஏக,

'மழைக்குன்றம் அணையான் மௌலி கவித்தனன் வரும், என்று என்று
தழைக்கின்ற உள்ளத்தேன் முன், ஒரு தமியன் வந்தான்
புனைந்திலன் மௌலி; குஞ்சி மஞ்செனப் புனித நீரால்
நினைந்திலன்; என் கொல்?
(இராமன் தாயை வணங்க)
வனைந்த பொன் கழற்கால் வீர! வாழ்க!
நினைந்தது என்? இடையூறு உண்டோ நெடுமுடி புனைதற்கு?

இராமன் :

(செங்கை கூப்பி)
-நின் காதல் திருமகன்,
பங்கம் இல் குணத்து எம்பி பரதனே,
துங்க மாமுடி சூடுகின்றான் —

கோசலை :

முறைமை அன்று என்பது ஒன்று உண்டு; மும்மையின்
நிறை குணத்தவன்; நின்னினும் நல்லனால்;
குறைவு இலன் —
மன்னவன் ஏவியது
அன்று எனாமை, மகனே! உனக்கு அறன்;
நன்று, நும்பிக்கு நானிலம் நீ கொடுத்து,
ஒன்றி வாழுதி, ஊழி பல —

இராமன் :

நால்வர்க்கும் மறுஇல் அன்பினில் வேற்றுமை மாற்றினோய்!
நாயகன், எனை நல் நெறி உய்ப்பதற்கு
ஏயது உண்டு ஓர் பணி!

கோசலை :

தூய சிந்தை தோம் இல் குணத்தினாய்!
ஈண்டு உரைத்த பணி என்னை?

இராமன் :

"ஆண்டு ஓர் ஏழினோடு ஏழ் அகன் கானிடை
மாண்ட மா தவத்தோருடன் வைகி, பின்
மீண்டு நீ வரல் வேண்டும்" என்றான்

கோசலை :

(ஏங்கி, இளைத்து, திகைத்து, மனம் வீங்கி. விம்மி விழுந்து)

வஞ்சமோ, மகனே ! உனை 'மாநிலம்
தஞ்சம் ஆக நீ தாங்கு' என்ற வாசகம் ?
நஞ்சமோ ! இனி, நான் உயிர் வாழ்வெனோ?
அஞ்சும் ; அஞ்சும் ; என் உயிர் அஞ்சுமால் !

நன்று மன்னன் கருணை !
(நின்ற மைந்தனை நோக்கி)
நெடுஞ் சுரத்து என்று போவது?
அன்பு இழைத்த மனத்து அரசற்கு, நீ
என் பிழைத்தனை ?—
முன்பு இழைத்த வறுமையின் முற்றினோர்,
பொன் பிழைக்கப் பொதிந்தனர் போன்றதே

அறம் எனக்கு இலையோ ? ஆவி நைந்து
இறவு அடுத்தது என் ! தெய்வதங்காள் ! (என்று கலங்கினாள்)

இராமன் :

(தாயைக் கைத் தலத்தின் எடுத்து)
அருங் கற்பினோய் !
பொய்த் திறத்தினன் ஆக்குதியோ ?—புகல்—
மெய்த்திறத்து நம் வேந்தனை நீ—?
சிறந்த தம்பி திரு உற, எந்தையை
மறந்தும் பொய் இலன் ஆக்கி, வனத்திடை
உறைந்து பேரும் உறுதி பெற்றேன்; இதின்,
பிறந்து யான் பெறும் பேறு என்பது யாவதோ !

விண்ணும் மண்ணும், இவ் வேலையும் மற்றும் வேறு
எண்ணும் பூதம் எலாம் அழிந்து ஏகினும்,
அண்ணல் ஏவல் மறுக்க, அடியனேற்கு
ஒண்ணுமோ ? இதற்கு உள் அழியேல்;—

கோசலை :

ஆகின், ஐய ! அரசன் தன் ஆணையால்
ஏகல் என்பது யானும் உரைக்கிலென்;
சாகலா உயிர் தாங்க வல்லேனையும்
போகின், நின்னொடும் கொண்டனை போகு—

இராமன் :

என்னை நீங்கி இடர்க்கடல் வைகுறும்
மன்னர் மன்னனை வற்புறுத்தாது, உடன்
துன்னு கானம் தொடரத் துணிவதோ?
அன்னையே ! அறம் பார்க்கிலை ஆம்—

வரி வில் எம்பி இம் மண் அரசு ஆய் அவற்கு
உரிமை மா நிலம் உற்றபின், கொற்றவன்
திருவின் நீங்கித் தவம் செயும் நாள், உடன்
அருமை நோன்புகள் ஆற்றுதி ஆம் அன்றே !

சித்தம் நீ திகைக்கின்றது என்? தேவரும்
ஒத்த மாதவம் செய்துயர்ந்தார் அன்றே ?
எத்தனைக்கு உள ஆண்டுகள்? ஈண்டு, அவை
பத்து நாலு பகல் அலவோ?—

முன்னர் கோசிகன் 'என்னும் முனிவரன்—
தன் அருள்தலை தாங்கிய விஞ்சையும்
பின்னர் எய்திய பேறும் பிழைத்தவோ ?
இன்னம் நன்று அவர் ஏயின செய்தலே.

மாதவர்க்கு வழிபாடு இழைத்து அரும்
போதம் முற்றி, பொரு அரு விஞ்சைகள்
ஏதம் அற்றன தாங்கி, இமையவர்
காதல் பெற்று இந்நகர் வரக் காண்டியால்

மான் மறிக் கரத்தான் மழு ஏந்துவான்,
தான் மறுத்திலன் தாதை சொல்; தாயையே
ஊன் அறக் குறைத்தனன்; உரவோன் அருள்
யான் மறுப்பது என்று எண்ணுவதோ ?—

கோசலை :

(தனக்குள்)

மகன்,

எத்திறத்தும் இறக்கும் இந்நாடு ;
அவனி காவல் பரதனது ஆகுக;
இவன் இஞ் ஞாலம் இறந்து இருங் கானிடைத்

தவன் நிலாவகை காப்பென், தகவினால்
புவனி நாதன் தொழுது—
(கைகேயியின் மாளிகை போயினாள்)

இராமன் :

(போகின்றாளைத் தொழுது)
புரவலன் ஆக மற்று அவள் தன்னையும் ஆற்றி,
இச்சோகம் தீர்ப்பவள் சுமித்திரை
(என்று கூறியபடி சுமத்திரை கோயிலை மேவினான்)

## காட்சி—7

இடம் : கைகேயி மாளிகை.

இருப்போர் : தயரதன், கைகேயி, கோசலை.

கோசலை :

(மன்னவன் கிடந்த பார் மிசை வீழ்ந்து)
பிறியார் பிரிவு எது?—'பெரியோய் தகவோ!'
நெறியோ, அடியேம் நிலை? நீ நினையா நினைவு ஏது?—
வறியோர் தனமே!—தமியேன் வலியே !
அறிவோ? வினையோ?—அரசே! அரசே!

இருள் அற்றிட உற்று ஒளிரும் இரவிக்கு எதிரும் திகிரி
உருளத் தனி உய்த்து, ஒருகோல் நடையின், கடை காண் உலகம்,
பொருள் அற்றிட முற்றுறும் அப்பகலில் புகுதற்கு என்றோ,
அருளக் கருதுற்று இதுவோ? அரசர்க்கு அரசே!

திரை ஆர் கடல் சூழ் உலகின் தவமே! திருவின் திருவே !
நிரை ஆர் கலையின் கடலே: நெறி ஆர் மறையின் நிலையே !
கரையா அயர்வேன்; எனை நீ, கருணாலயனே! என்? என்று
உரையாய்; இதுதான் அழகோ? உலகு ஏழ் உடையாய்!

மின் நின்றனைய மேனி, வெறிது ஆய், விடம் நின்றது போல்
உன்னும் தகைமைக்கு அடையா உறுநோய் உறுகின்று உணரான்;
என் என்று உரையான்; என்னே? இதுதான் யாது என்று அறியேன்
மன்னன் தகைமை காண வாராய்: மகனே!

(வசிட்டன் அப்போது வந்து நின்று)

வசிட்டன் : (தனக்குள்)

இறந்தான் அல்லன் அரசன்; இறவாது ஒழிவான் அல்லன்;
மறந்தான் அல்லன் அரசன்: மறவாது ஒழிவான் அல்லன்;
துறந்தாள் துயரம் தன்னை; துறவாது ஒழிவாள் இவளே,
பிறந்தார் பெயரும் தன்மை பிறரால் அதற்கு எளிதோ?

(கேகயர் கோன்மகள் முனிவரைத் தொழ

அன்னாய் உரையாய் அரசன் அயர்வான் நிலை என் ?

கைகேயி :

என்னால் நிகழ்ந்த எல்லாம் இவையே

ஏய வரங்கள் இரண்டில் ஒன்றினால், என்

சேய் உலகாள்வது; சீதை கேள்வன் ஒன்றால்

போய் வனம் ஆள்வது - எனப் புகன்றனன் மன்னன்

வசிட்டன் :

(அரசர்க்கு அரசைக் கையால் எழுவி)

கற்றாய், அயரேல்; அவளே தரும், நின் கார்தற்கு அரசை;

எற்றே ? செயல் இன்று ஒழி நீ.

தயரதன் :

(தனக்குள்) காதல் புதல்வ! இராம! இராம!

வசிட்டன் :

—ஐயா! இனி, நீ ஒழிவாய் கழி பேர் அவலம்;

ஆண் நாயகனே, இனி நாடு ஆள்வான்; இடையூறு உளதோ?
மாணா உரையாள், தானே தரும்; மாமழை அனையான் மகுடம்
பூணாது ஒழிவான் எனின், யாம் உளமோ ? பொன்றேல் —

தயரதன் :

நினையா வினையேன், இனி, யான்

பொன்றும் அளவில் அவனைப் புனை மா மகுடம் புனைவித்து,
ஒன்றும் வனம் என்று உன்னா வண்ணம் செய்து என் ஊரையும்,
குன்றும் பழி பூணாமல், காவாய்; கோவே!

வசிட்டன் :

(கைகேயி முகம் முன்னி)

இனி, உன் புதல்வற்கு அரசும், எனையோர் உயிர்க்கு உயிரும்

மனுவின் வழி நின் கணவற்கு உயிரும் உதவி, வசைதீர்
புனிதம் மருவம் புகழே புனையாய்; பொன்னே!

கைகேயி :

(வசிட்டனை நோக்கி)
மொய்ம் மாண் வினை நேர் அற வென்று உயர்வோய்!
அரசன் மெய்யின் திரிவான் என்னில்,

இம்மாண் உலகத்து உயிரோடு இனி வாழ்வு உகவேன்;
என்சொல்
பொய்ம் மாணாமற்கு, இன்றே பொன்றாது ஒழியேன் —

வசிட்டன் :

(முனிந்து)
கொழுநன் துஞ்சும் எனவும், கொள்ளாது உலகம் எனவும்,
பழி நின்று உயரும் எனவும், பாவம் உளது ஆம் எனவும்,
ஒழிகின்றிலை; அன்றியும், ஒன்று உணர்கின்றிலை; யான்
இனிமேல்
மொழிகின்றன என் ? — முறை அன்று—

வாயால், மன்னன், மகனை, வனம் ஏகு ! என்னா முன்னம்,
நீயோ சொன்னாய்; அவனோ, நிமிர் கானிடை வெந்நெறியில்
போயோ புகலோ தவிரான்; புகழோடு உயிரைச் சுடுவெந்
தீயோய்! நின்போல் தீயார் உளரோ ? செயல் என் ?—

தயரதன் :

(நங்கை தன்னை நோக்கி)
பாவி! நீயே, வெங்கான் படர்வாய்! என்று என் உயிரை
ஏவினாயோ ? அவனும் ஏகினானோ ?—

கண்டேன் நெஞ்சம்; கனிவாய் கனிவாய் விடம் நான்நெடுநாள்
உண்டேன்; அதனால், நீ என் உயிரை முதலோடு உண்டாய்;
பண்டே, எரிமுன், உன்னை, பாவி! தேவி ஆகக்
கொண்டேன் அல்லேன்; வேறு ஓர் கூற்றம் தேடிக்கொண்டேன்!

விழிக்கும் கண் வேறு இல்லா, வெங்கான் கான்முளையைச்
சுழிக்கும் வினையால் ஏகச் சூழ்வாய்; என்னைப் போழ்வாய்;
பழிக்கும் நாணாய்; மாணாப் பாவி! இனி, என்பல ? உன்
கழுத்தின் நாண், உன் மகற்குக் காப்பின் நாண் ஆம்—

இன்னே பலவும் பகர்ந்தும் இரங்காதாளே!—
சொன்னேன் இன்றே; இவள் என் தாரம் அல்லள்; துறந்தேன்;

மன்னே ஆவான் வரும் அப்பரதன் தனையும் மகன் என்று
உன்னேன்; முனிவா! ஆகான் உரிமைக்கு!—
(கோசலையைப் பின்னைக் கண்டு)
-உயர் கோசலை!

என்னைக் கண்டும் ஏகாவண்ணம் இடையூறு உடையான்
உன்னைக் கண்டும் இலனோ ?

கோசலை :

(தளர்வாள்)
மாற்றாள் செயல் ஆம்; என்றும் கணவன் வரம் ஈந்து உள்ளம்
ஆற்றாது அயர்ந்தான்; என்றும் அறிந்தேன்?
(தயரதனை நோக்கி)
தள்ளா நிலைசால் மெய்ம்மை தழுவா வழுவா வகைநின்று,
எள்ளா நிலை கூர் பெருமைக்கு இழிவுஆம் என்றால் உரவோய்!
விள்ளா நிலை சேர் அன்பால் மகன்மேல் மெலியின், உலகம்
கொள்ளாது அன்றோ ?

அரசன் தோற்றான் மெய் என்று உலகம் சொல்லிப் பழிக்கும்,
போவாது ஒழியான் புதல்வன்;
காவாய் என்னேன் மகனை;
கணவன் சாவாது ஒழியான்
கணவன் புகழுக்கு அழிவேன்.

தயரதன் :

(தனக்குள்)

உயர்ந்தான் உரைசால் குமரன், புணரான் நிலமே;
வனமே போவானே ஆம்—
(உரக்க)

வினைமயன் துணைவா! துணை வா; தோன்றால்! தோன்றாய்!
படைமாண் அரசைப் பலகால் மழுவாள் அதனால் எறிவான்,
மிடைமாவலி தான் அனையான் வில்லால் அடுமா வல்லோய்!
'உடைமா மகுடம் புனை' என்று உரையா, உடனே கொடியேன்
சடைமா மகுடம் புனையத் தந்தேன்; அந்தோ!—

பொன்னின் முன்னம் ஒளிரும் பொன்னே! புகழின் புகழே!
மின்னின் மின்னும் வரிவில் குமரா! மெய்யின் மெய்யே!
என்னின் முன்னம் வனம் நீ அடைதற்கு, எளியேன் அல்லேன்;
உன்னின் முன்னம் புகுவேன், உயர் வானகம், யான்!

நெகுதற்கு ஒத்த நெஞ்சும், நேயத்தாலே ஆவி
உகுதற்கு ஒத்த உடலும், உடையேன்; உன்போல் அல்லேன்;
தகுதற்கு ஒத்த சனகன் தையல் கையைப் பற்றிப்
புகுதக் கண்ட கண்ணால், போகக் காணேன்—

அள்ளற் பள்ளப் புனல் சூழ் அகல் மாநிலமும், அரசும்,
கொள்ளக் குறையா நிதியின் குவையின், முதலா எவையும்
கள்ளக் கைகேசிக்கே உதவி, புகழ்கைக் கொண்ட
வள்ளல் தனம் என் உயிரை மாய்க்கும்! மாய்க்கும்!—

பூண் ஆர் அணியும், முடியும், பொன் ஆசனமும், குடையும்,
சேண் ஆர் மார்பும், திருவும், தெரியக் காணக் கடவேன்,
மாணா மரவற்கலையும், மானின் தோலும் அவை நான்
காணாது ஒழிந்தேன் என்றால், நன்று ஆய்த்து அன்றோ கருமம் ?

வசிட்டன் :

வேந்தே! அயரேல்; அவனை, இன்று ஏகாத வண்ணம்
தகைவென் உலகொடு.

தயரதன் :

(ஆவலுடன் வசிட்டனை நோக்கி) முடியும் கொல் ?
(தனக்குள்) இந்தப்
புனிதன் போனால், இவனால், போகாது ஒழிவான்;
தனி நின்ற என் உயிரைச் சிறிதே தகைவேன்.
(தன்னை மறந்து மயங்க)

கோசலை :

மறந்தான் நினைவும் உயிரும், மன்னன்
(தனக்குள்)
இறந்தான் கொல்லோ அரசன் ?
(உரக்க)
துறந்தான் மகன் முன் எனையும்; துறந்தாய் நீயும்; துணைவா!
அறம் தான் இதுவோ! ஐயா! அரசர்க்கு அரசே!
மெய்யின் மெய்யே! உலகின் வேந்தர்க்கு எல்லாம் வேந்தே!
உய்யும் வகை நின் உயிரை ஓம்பாது இங்ஙனன் தேம்பில்,

வையம் முழுதும் துயரால் மறுகும்; முனிவனுடன் நம்
ஐயன வரினும் வருமால்; அயரேல்; அரசே!

தயரதன் .

(மெல்ல) வன் திண் சிலை நம் குரிசில் வருமே? வருமே?
(கோசலை தன் செய்ய கையால், அரசன் மெய்யும்,
இருதாள் இணையும், முகனும் தைவர)

வன் மாயக் கைகேசி வாக்கால் என் தன் உயிரை

முன் மாய்விப்பத் துணிந்தாளேனும்; கூனி மொழியால்,
தன் மாமகனும் தானும தரணி பெறுமாறு அன்றி,
என் மாமகனை, "கான் ஏகு" என்றால் என்னோ?
பொன் ஆர் வலயத் தோளான், கானோ புகுதல் தவிரான்,

என் ஆர் உயிரோ அகலாது ஒழியாது; இது, கோசலை கேள்;
முன் நாள் ஒரு மா முனிவன் மொழியும் சாபம் உளது;
அண்ணல் வனம் ஏகுதலும்
எந்தன் உயிர் வீகுதலும் இறையும் தவறா,

(இம்மா மொழி தந்து அரசன் இடர் உற்றிடும்
போழ்தினில், அம் செம்மாமயில் கோசலையும் திகையா
உணர்வு ஒவினாள்; மாதவனும் விரைவோடு சென்றான்)

## காட்சி—8

இடம் : அத்தாணி மண்டபம்.

இருப்போர் : வசிட்டன், பல தேயத்து மன்னர்கள், நகர மாந்தர், இராமன், இலக்குவன்.

மன்னரில் ஒருவர் :

(வசிட்டனை நோக்கி)

எந்தை! புகுதற்கு இடையூறு உண்டாயதோ?
அந்தம் இல் சோகத்து அழுதகுரல் தான் என்ன?
சிந்தை தெளிந்தோய்! தெரி எமக்கு ஈது—

வசிட்டன் :

கொண்டாள் வரம் இரண்டு, கேகயர் கோன் கொம்பு.
தண்டாத செங்கோல் தயரதனும் தான் அளித்தான்;
'ஒண்தார் சிலை முகிலை வனம் போகு' என்று ஒருப்படுத்தாள்
எண்தானும் வேறு இல்லை; ஈது அடுத்தவாறு

வேந்தன் பணியினால், கைகேசி மெய்ப் புதல்வன்,
பாந்தாள் மிசைக் கிடந்த பார் அளிப்பான் ஆயினான்.
ஏந்து தடந் தோள் இராமன், திருமடந்தை
காந்தன்; ஒரு முறை போய்க் காடு உறைவான் ஆயினான்
(மாந்தர் முதலானோர் புண் உற்ற தீயின் புகை உற்று உயிர் புதைத்து)

மன்னரில் ஒருவர் :

ஆ! ஆ! அரசன் அருள் இலனே ஆம்;—

மற்றொருவர் :

காவா, அறத்தை இனிக் கைவிடுவேம் யாம்—

வேறொருவர் :

ஞானியும் உய்கலான், என்னாதே, நாயகனைக்
'கான் ஈயும்' என்றுரைத்த கைகேசியும், கொடிய
கூனியும் அல்லால் கொடியார் பிறர் உளரோ ?

நகரமாந்தர் :

1 : மன் செய்த பாவம் உளது.
2 : மாமலர் மேல் பெண் செய்த பாவம் அதனின் பெரிது
3 : புண் செய்த நெஞ்சை விதி
4 : பூதலத்தோர் கண் செய்த பாவம் கடலின் பெரிது.
5 : ஆளான் பரதன் அரசு; ஐயன் இனி மீளான்
நமக்கு விதி சொடிதே காண்.
6 : கோள் ஆகி வந்தவா, கொற்ற முடிதான்
மாளாத நம்மின் மனம் வலியார் ஆர் ?
7 : ஆதி அரசன், அருங் கேகயன் மகள் மேல்
காதல் முதிர, கருத்து அழிந்தான் ஆம்—
8 : சீதை மணவாளன் தன்னோடும் தீக் கானம்
போதும்; அது அன்றேல், புகுதும் எரி.
9 : உய்யாள் போல் கோசலை;
ஐயா இளங் கோவே! ஆற்றுதியோ நீ ?
10 : நின்று தவம் இயற்றித் தான் தீர நேர்ந்ததோ ?
அன்றி உலகத்துள், ஆர் உயிராய் வாழ்வாரைக்

கொன்று களையக் குறித்த பொருளதுவோ ?
நன்று, வரம் கொடுத்த நாயகற்கு, நன்று!

11 : பெற்றுடைய மண் அவளுக்கு ஈந்து பிறந்து உலகம்
முற்று உடைய கோவைப் பிரியாது மொய்த்து ஈண்டி,
உற்று உறைதும்; யாரும் உறையவே, சில நாளில்
புற்று உடைய காடு எல்லாம் நாடாகிப் போம்—

12 : என்னே நிருபன் இயற்கை இருந்தவா!
தன்நேர் இலாத தலைமகற்குத் தாரணியை
முன்னே கொடுத்து, முறை திரும்பத் தம்பிக்குப்
பின்னேகொடுத்தால் பிழையாதோ மெய் ?

13 : கோதை வரி வில் குமரற் கொடுத்த நில
மாதை ஒருவர் புணர்வராம் ? வஞ்சித்த
பேதை சிறுவனைப் பின் பார்த்து நிற்குமே,
சீதைப் பிரியினும் தீராத் திரு ?—

நகரப் பெண்ணொருத்தி :

செந்தாமரைத் தடங்கண் செல்வி அருள் நோக்கம்,
அந்தோ! பிரிதுமோ ? ஆ ! விதியே ! ஓ !

வேறு ஒருத்தி :

'வள்ளல் வனம் புகுவான்' என்று உரைத்த மாற்றத்தால்,—
கிள்ளையொடு பூவை அழுத; கிளர் மாடத்து
உள்ளுறையும் பூசை அழுத; உரு அறியாப்
பிள்ளை அழுத; பெரியோரை என்சொல்ல ?

மற்றவள் :

எம் இல்லில்
ஆவும் அழுத; அதன் கன்று அழுத; இன்று அலர்ந்த
பூவும் அழுத; புனல் புள் அழுத; கள் ஒழுகும்
காவும் அழுத; களிறு அழுத; கால் வயப்போர்
மாவும் அழுத; — நம் மன்னவனை மானவே —

## காட்சி—9

இடம் : அரண்மனையின் ஒரு பகுதி

இருப்போர் : இலக்குவன், இராமன் முதலானோர்

இலக்குவன் :

நாவில் நஞ்சம் உடைய நங்கை — கிளர் ஞாலம் வரத்தினாலே
மீட்டாள்; அளித்தாள் தம்முனை, வெம்மை முற்றி;—

திட்டாத வேல் கண் சிறு தாய்—

சிங்கக் குருளைக்கு இடு தீம் சுவை ஊனை; நாயின்
வெங்கண் சிறு குட்டனை ஊட்டவிரும்பினாளே!

நங்கைக்கு அறிவின் திறம்! நன்று இது! நன்று, இது!—
(வில் தாங்கி, வாளிப் பெரும் புட்டில் புறத்து வீக்கி)

புவிப் பாவை பரம் கெட, போரில் வந்தோரை எல்லாம்
அவிப்பானும், அவித்து அவர் ஆக்கையை அண்டம் முற்றக்
குவிப்பானும், எனக்கு ஒருகோவினைக் கொற்ற மௌலி
கவிப்பானும், நின்றேன்; இது காக்குநர் காமின்—

விண்நாட்டவர், மண்ணவர், விஞ்சையர், நாகர், மற்றும்
எண் நாட்டவர், யாவரும் நிற்க, ஓர் மூவர் ஆகி,
மண் நாட்டுநர், காட்டுநர், வீட்டுநர் வந்த போதும்,
பெண் நாட்டம் ஒட்டேன், இனிப் பேர் உலகத்துள்—

(இலக்குவன் பிடியில் சிலை தடவ நாண் பெரும் பூசல் ஓசை இடியின் தொடர, ஓர் அஞ்சனை மேகம் என்ன இராமன் வந்தான்)

இராமன் :

ஆற்றல் துணைத் தம்பி நின் வில் - புயல் அண்டகோளம்
கீற்று ஒத்து உடைய கேளா—படும் நாண் உரும் வந்தேன்
என் அத்த! என், நீ இறையேனும் முனிந்திலாதாய்,
சன்னத்தன் ஆகித் தனு ஏந்துதற்கு ஏது ?

இலக்குவன் :

மெய்யைச் சிதைவித்து, நின் மேல் முறை நீத்த நெஞ்சம்
மையின் கரியாள் எதிர், நின்னை அம்மௌலி சூட்டல்
செய்யக் கருதி, தடை செய்குநர் தேவரேனும்
துய்யைச் சுடு வெங் கனலின் சுடுவான் துணிந்தேன்;

வலக்கார் முகம் என் கையது ஆக, அவ் வானுளோரும்
விலக்கார்; அவர் வந்து விலக்கினும், என் கை வாளிக்கு
இலக்கா எரிவித்து, உலகு ஏழினோடு ஏழும், மன்னர்
குலக் காவலும், இன்று உனக்கு யான் தரக்கோடி—

இராமன் :

பொன் ஒத்த மேனிப் புயல் ஒத்த தடக்கையாய்—இயைந்த நீதி

வளையாவரும் நல் நெறி நின் அறிவு ஆகும் அன்றே
உளையா அறம் வற்றிட ஊழ் வழுவுற்ற சீற்றம்
விளையாத நிலத்து, உனக்கு எங்ஙன் விளைந்தது ?

இலக்குவன் :

(நித்திலம் தோன்ற நக்கு)
'சேண் தான் தொடா மா நிலம் நின்னது' என்று உந்தை செப்பப்
பூண்டாய்; 'பகையால் இழந்தே வனம் போதி' என்றால்,
யாண்டோ, அடியேற்கு இனிச் சீற்றம் அடுப்பது ?—

நின்கண் பரிவு இல்லவர் நீள் வனத்து உன்னை நீக்க,
புன்கண் பொறி யாக்கை பொறுத்து, உயிர் போற்றுகேனோ —
என் கட்புலமுன் உனக்கு ஈந்துவைத்து 'இல்லை' என்ற
வன்கண் புலம் தாங்கி மன்னவன் காண்கொல் ?—

இராமன் :

'பின், குற்றம் மன்னும் பயக்கும் அரசு; என்றல், பேணேன்;
முன், கொற்ற மன்னன், 'முடி கொள்க' எனக் கொள்ள மூண்டது
என் குற்றம் அன்றோ ? இகல் மன்னவன் குற்றம் யாதோ ?—
மின் குற்று ஒளிரும் வெயில் தீக்கொடு அமைந்த வேலோய்!

நதியின் பிழையன்று நறும் புனல் இன்மை; அற்றே
பதியின் பிழை அன்று; பயந்து நமைப் புரந்தாள்
மதியின் பிழை அன்று; மகன் பிழை அன்று, மைந்த!
விதியின் பிழை; நீ இதற்கு என்னை வெகுண்டது ?—

இலக்குவன் :

கொதிக்கும் மனம் எங்ஙனம் ஆற்றுவென் ? கோள் இழைத்தாள்
மதிக்கும் மதி ஆய், முதல் வானவர்க்கும் வலிஇது ஆம்,
விதிக்கும் விதி ஆகும், என் வில்- தொழில் காண்டி.

இராமன் : ஐய! நின் தன்

வாய் தந்தன கூறுதியோ, மறை தந்த நாவால் ?
நீ தந்தது, அன்றே, நெறியோர் கண் நிலாதது ? ஈன்ற
தாய் தந்தை என்றால், அவர் மேல் சலிக்கின்றது என்னோ?

இலக்குவன் :

நல் தாதையும் நீ; தனி நாயகன் நீ; வயிற்றில்
பெற்றாயும் நீயே; பிறர் இல்லை; பிறர்க்கு நல்கக்

கற்றாய் ! இது காணுதி இன்று !
முற்றா மதியம் மிலைந்தான் முனிந்தானை அன்னாய்!

இராமன் :

வரம் பெற்றவள் தான் இவ் வையம்
சரதம் உடையாள்: அவள் என் தனித் தாதை செப்பப்
பரதன் பெறுவான்; இனி, யான் படைக்கின்ற செல்வம்
விரதம்; இதன் நல்லது வேறு இனி யாவது ?—
— ஐய ! இவ் வைய மையல்
தோன்றா நெறி வாழ் துணைத் தம்முப் போர் தொலைத்தோ?
சான்றோர் புகழும் தனித் தாதையை வாகை கொண்டோ ?
ஈன்றாளை வென்றோ, இனி, இக் கதம் தீர்வது ?

இலக்குவன் :

சொல்லும் சொல் வல்லாய் !— தெவ்வர் சொல்லும்
சொலலும சுமந்தேன்; இரு தோள் எனச் சோம்பி ஓங்கும்
கல்லும் சுமந்தேன்; கணைப் புட்டிலும், சட்டு அமைந்த
வில்லும், சுமக்கப் பிறந்தேன்; வெகுண்டு என்னை ? -

இராமன் :

நன் சொற்கள் தந்து ஆண்டு, எனை நாளும் வளர்த்த தாதை
தன் சொல் கடந்து, எற்கு அரசு ஆள்வது தக்கது அன்றால்:
என் சொல் கடந்தால் உனக்கு யாது உளது ஈனம் ?

இலக்குவன் :

தென் சொல் கடந்தாய் ! வட சொற்கு எல்லை தேர்ந்தாய்
சீற்றம் துறந்தேன்: எதிர் நின்று தெரிந்து செய்யும்
யாற்றம் துறந்தேன்

(இலக்குவன் — நம்பி தன் ஆணையாலே— தணிவு எய்தி
நின்றான் —இருவரும சொல் மாண்புடை அன்னை
சுமித்திரை கோயில் புக்கனர்)

## காட்சி—10

இடம் : சுமித்திரை கோயில்

இருப்போர் : சுமித்திரை. இராமன், இலக்குவன்.

(சுமித்திரை சோர்வாளாய் நின்றிருக்க)

சுமித்திரை :

ஏன் கண்கள் போல்வீர் !
தண்டாவனம் செல்வதற்கே சமைந்தீர் !
புண்தாங்கு நெஞ்சத்திலேன்
உண்டாய துன்பக் கடற்கு எல்லை உணர்ந்திலேன்
(என படிமேல் புரண்டாள். சோர்வாளை
இராமன் ஓடித் தொழுது ஏத்தி)

இராமன் :

சொல் மாண்புடை அன்னை !
போர்வாள் அரசர்க்கு இறை பொய்த்தனன் ஆக்ககில்லேன் ;
கார் வான் நெடுங்கான் இறை கண்டு, பின் மீள் வென்.
கான் புக்கிடினும், கடல் புக்கிடினும், கலிப்பேர்
வான் புக்கிடினும், எனக்கு அன்னவை மாண் அயோத்தி
யான் புக்கது ஒக்கும், ; எனை யார் நலிகிற்கும் ஈட்டார் ?
ஊன்புக்கு, உயிர்புக்கு, உலையற்க !—

(மாயாப் பழியாள் கைகேயின் ஏவல் மகளிர்
வற்கலை ஏந்தி வரல்)

ஏவல்பெண் :

பேரா இடர்ப்பட்டு அயலார் உறு பிழை கண்டும்
தீரா மனத்தாள் தர, வந்தன சீரம்.

இலக்குவன்

(ஏவல் மகளிரை நோக்கி)
வாள் நித்தில வெண் நகையீர் !
யாணர்த் திருநாடு இழப்பித்தவர் ஈந்த எல்லாம்
பூணப் பிறந்தானும் நின்றான், போர்விலோடும்
காணப் பிறந்தனேும் நின்றேன் ; அவை காட்டும்.
(அவர் சீரம் தர ஆதரத்தோடும் ஏந்தி)

இலக்குவன் :

உண்டாய துன்பக் கடற்கு எல்லை உணர்ந்திலாதோய் !
'உடன் ஏகு' என எம் பிராட்டி சொன்னால்,
அதுவே துணை ஆம்.— தூய நங்கை ! நின்
பொன் அடி பணிந்தேன்

சுமித்திரை :

இளையோய் !

ஆகாதது அன்றால் உனக்கு ; அவ் வனம் இவ் அயோத்தி ;
மா காதல் இராமன் அம் மன்னவன் ; வையம் ஈந்தும்

போகா உயிர் தாயர் நம் பூங்குழல் சீதை-என்றே
ஏகாய் ; இனி இவ் வயின் நிற்றலும் ஏதம்
பின்னும் பகர்வேன், கேள் !—மகனே ! இவன் பின் செல் ;
தம்பி
என்னும்படி அன்று, அடியாரின் ஏவல் செய்தி ;
மன்னும் நகர்க்கே இவன் வந்திடின், வா ; அது அன்றேல்
முன்னம் முடி !—

(என வார் விழி சோர நின்றாள். வள்ளல் தம்பி,
ஆய் தந்த மெய் சீரை அணிந்து அடி தாழ்ந்து நிற்க)
நிந்தை இன்றிப் பல ஊழி தழைத்தி ;

இராமன் :

(இலக்குவனை நோக்கி)

வான் புனை இசையினாய் ! மறுக்கிலாது, நீ
யான் புகல் இணையது ஓர் உறுதி கேள்.

அன்னையர் அனைவரும், ஆழி வேந்தனும்
முன்னையர் அல்லர் ; வெந்துயரின் மூழ்கினர் ;
என்னையும் பிரிந்தனர், இடர் உறாவகை
உன்னை நீ என் பொருட்டு உதவுவாய் !

இலக்குவன் :

ஆண் தகை !
ஈண்டு உனக்கு அடியனேன் பிழைத்தது யாது ?

நீர் உள எனின் உள, மீனும், நீலமும்,
பார் உள எனின் உள, யாவும்; பார்ப்புறின்,
நார் உள தனு உளாய் ! நானும் சீதையும்
ஆர் உளர் எனின் உளேம் ? அருளுவாய் !

பைந்தொடி ஒருத்தி சொல் கொண்டு, பார்மகள்
நைந்து உயிர் நடுங்கவும் 'நடத்தி கான்' எனா,
உய்ந்தனன் இருந்தனன் உண்மை காவலன்
மைந்தன் என்று, இனைய சொல் வழங்கினாய் ?

செய்துடைச் செல்வமோ, யாதும் தீர்ந்து எனை,
கை துடைத்து ஏகவும் கடவையோ ? -ஐய !

நெய் துடைத்து, அடையலர் நேய மாதர் கண்
மை துடைத்து உறை புகும் வயம் கொள் வேலினாய் !

(இராமன் ஒன்றும் உரைக்கலாது, தாமரைக் கண்ணை மிக்க நீர் நிறைத்து நெடிது நிற்க, அவ்வயின் தவமுனிவன் கால் வைத்து பொன் அரைச் சீரையின் பொலிவு நோக்கி)

வசிட்டன் :

வில் தடந்தாமரைச் செங்கண் வீர !
வாழ்வினை நுதலிய மங்கலத்து நாள்,
தாழ்வினை அதுவர சீரை சாத்தினான்;
சூழ் வினை நான் மூகத்து ஒருவன் சூழினும்,
ஊழ்வினை ஒருவரால் ஒழிக்கற் பாலதோ ?

வெவ் வினையவள் தர விளைந்ததேயும் அன்று;
இவ் வினை இவன்வயின் எய்தற்பாற்றும் அன்று;
எவ்வினை நிகழ்ந்ததோ ? ஏவர் எண்ணமோ ?

செவ்விதின் ஒரு முறை தெரியும் பின் —
ஐய ! நீ ஒருவி ஓங்கிய
கல் தடம் காணுநி எண்ணின், கண் அகல்
மல் தடந் தானையன் வாழ்கிலான்

இராமன் :

அன்னவன் பணி தலை ஏந்தி ஆற்றுதல்
என்னது கடன்; அவன் இடரை நீக்குதல்
நின்னது கடன்; இது நெறியும்.

வசிட்டன் :

'வெவ் வரம்பை இல் சுரம் விரவு' என்றான் அலன்
தெவ்வர் அம்பு அனைய சொல் தீட்டினாள் தனக்கு.
அவ் அரம் பொருத வேல் அரசன், ஆய்கிலாது
'இவ் வரம் தருவென்' என்று ஏன்றது உண்டு.

இராமன் :

ஏன்றனன் எந்தை இவ் வரங்கள்; ஏவினாள்
ஈன்றவள்; யான் அது சென்னி ஏந்தினேன்;
சான்று என நின்ற நீ தடுத்தியோ ?

(என்றலும், முனிவன் நின்றனன், குன்றன தோளவன் தொழுது, கொற்றவன் வாயில் போய பின் தன் மனையை நோக்கினான்; சானகி இருந்துழிச் சார்ந்தான்)

## காட்சி—11

இடம் : சீதையின் அரண்மனை.

இருப்பேபர் : இராமன், சீதை, தோழியர்.

(சூழ்நிலை : இராமன் சானகி இருந்துழி சீரையினன் வரும்படி பாரா, எழுது பாவை அன்னாள் மனத் துணுக்கமொடு எழுந்தாள்).

சீதை :

பொன்னை உற்ற பொலங் கழலோய்! புகழ்-
மன்னை உற்றது உண்டோ ? மற்று இவ்வன் துயர்
என்னை உற்றது இயம்பு.

இராமன் :

மின்னை உற்ற நடுக்கத்து மேனியாய் !
பொருஇல் எம்பி புவி புரப்பான்; புகழ்
இருவர் ஆணையும் ஏந்தினென்; இன்று போய்
கருவி மாமழைக் கல்-கடம் கண்டு, நான்
வருவென் ஈண்டு: வருந்தலை நீ.

சீதை :

நாயக !

'நீ வருந்தலை: நீங்குவென் யான்' என்ற
தீய வெம் சொல் செவி சுடும் !

(மனத்துக்குள்) ஐயனும் அன்னையும்,
சொன்ன செய்யத் துணிந்தது தூயதே;
என்னை, என்னை 'இருத்தி' என்றான் ?
(உன்னி உன்னி உயிர் உமிழா நிற்க)

இராமன் :

எழுது பாவை அன்னாய்!
வல் அரக்கரின் மால் வரை போய் விழுந்து
அல் அரக்கின் உருக்கு அழல் காட்டு அதர்க்

கல் அரக்கும் கடுமைய அல்ல-நின்
சில் அரக்குண்ட சேவடிப் போது.

சீதை :

வள்ளலே !

பரிவு இகந்த மனத்து ஒரு பற்று இலாது
ஒருவுகின்றனை; ஊழி அருக்கனும்
எரியும் என்பது யாண்டையது? ஈண்டு, நின்
பிரிவினும் சுடுமோ, பெருங்காடு?

இராமன் :

(தூக்குரல்) இவள்
உள் நிவந்த கருத்து உணர்ந்தனென்;
.... என் செயற்பாற்று?
(சீதை உள் மனைபுக)
இவள், அகமனை எய்தினள்;
(சீதை சீரம் புனைந்துவர)

என் நீள்கரம் பற்றிய கையினாய்!
சீரம் துணிந்து புனைந்தனை!
நினைவின் என் பின் வந்து அயல் நின்றனை!

முல்லையும் கடல் முத்தும் எதிர்ப்பினும்
வெல்லும் வெண் நகையாய்! விளைவு உன்னுவாய்
அல்லை; போத அமைந்தனை ஆதலின்,
எல்லை அற்ற இடர் தருவாய்.

சீதை :

(சிரியபடி)
ஊற்று நின்ற துயரம் இது ஒன்றுமே?
என் துறந்த பின், இன்பம் கொலாம்?

(பிறிது ஓர் மாற்றம் பெருந்தகை பேசலன்; —
சீரை சுற்றித் திருமகள் பின் செல,
மூரி விற்கை இளையவன் முன் செல,
காரை ஒத்தவன்-தாதை வாயில் குறுகி)

## காட்சி—12

இடம்: தயரதன் வாயில்.

இருப்போர்: இராமன், இலக்குவன், சீதை, தாயார் இருவர் வசிட்டன், நகர மாந்தர்.

இராமன்:

(தாயரைக் கும்பிட்டு)

தாயர்!

ஆதி மன்னனை ஆற்றுமின் நீர்!

தாயர்:

மகனை, மருகியைக் –

காத்து நல்குமின், தெய்வதங்காள்!

(முனிவனைக் கைதொழா தம்பியும்,தாமரைப் பொன்னும், தானும் தேர்மிசைப் போயினான்)

## காட்சி—13

இடம்: புறநகர்.

இருப்போர்' இராமன், இலக்குவன், சீதை, பொதுமக்கள், சுமந்திரன், முனிவர்கள், மன்னவர்.)

(இராமனுடன் தொடர்ந்து வந்த பொது மக்கள் உறங்கினர்)

இராமன்:

மந்திரி சுமந்திர! வா!

ஏனையர் உறங்கினர்

ஊனம் இல் பெருங்குணம் ஒருங்கு உடைய உன்னால்

மேல் நிகழ்வது உண்டு அவ் உரை கேள்.

பூண்ட பேர் அன்பினாரைப் போக்குவது அரிது; போக்காது

ஈண்டு நின்று ஏகல் பொல்லாது; எந்தை நீ இரதன் இன்னே

தூண்டினை மீள்வது ஆக்கின் சுவட்டை ஓர்ந்து, என்னை, அங்கே,

மீண்டனன்' என்ன மீள்வர்; இது நின்னை வேண்டிற்று

சுமந்திரன்:

செவ்விய குரிசில் ...

அவ்

வெவ்விய தாயின், தீய விதியினின் மேலன் போலாம்:
இவ்வயின் நின்னை நீங்கி, இன் உயிர் தீர்ந்து இன்று ஏகி;
அவ்வயின் அனைய காண்டற்கு அமைதலால் அளியன்

தேவியும் இளவலும் தொடர, செல்வனைப்
பூ இயல் கானகம் புக உய்த்தேன் என்கோ?
கோவினை உடன் கொடு குறுகினேன் என்கோ?
யாவது கூறுகேன், இருப்பின் நெஞ்சினேன்?

நால்திசை மாந்தரும், நகர மாக்களும்
தேற்றினர் கொணர்வர் என் சிறுவன் தன்னை என்று
ஆற்றின அரசனை, ஐய! வெய்ய என்
கூற்று உறழ் சொல்லினால், கொலை செய்வேன் கொலோ!

'அங்கிமேல் வேள்வி செய்து அரிதின் பெற்ற நின்
சிங்க ஏறு அகன்றது' என்று உணர்த்தச் செல்கெனோ?
எங்கள் கோமகற்கு இனி, என்னின் கேகயன்
நங்கையே கடைமுறை நல்லள் போலுமால்!

(இன்னை மொழிந்த பின்னர்,
சுமந்திரன், அடி உறத் தழுவி,
படி உறப் புரண்டனன், இராமன்
தடக்கையால் எடுத்து, தழுவி, கண்ண நீர் துடைத்து)

இராமன் :

பிறத்தல் என்று உற்றபின் பெறுவ யாவையும்
திறத்துளி உணர்வது ஓர் செம்மை உள்ளத்தாய்!
புறத்ததுறு பெரும் பழி பொது இன்று எய்தலும்,
அறத்தினை மறத்தியோ, அவலம் உண்டு எனா?

'வினைக்கு அரு மெய்யம்மையின் வனத்துள் விட்டனன்,
மனக்கு அரும் புதல்வனை' என்றல் மன்னவன்
தனக்கு அருந்தவம்; அது தலைக் கொண்டு ஏகுதல்
எனக்கு அருந்தவம்: இதற்கு இரங்கல், எந்தை நீ

முந்தினை முனிவனைக் குறுகி, முற்றும் என்
வந்தனை முதலிய மாற்றம் கூறி, பின்
எந்தையை அவனோடும் எய்தி ஆண்டு 'என
சிந்தனை உணர்த்துதி' என்று செப்புவாய்.

முனிவனை, எம்பியை, 'முறையில் நின்று அரும்
புனித வேதியர்க்கும், மேல் உறை புத்தேளிர்க்கும்
இனியன இழைத்தி' என்று இயம்பி 'என் பிரி
'தனிமையும் தீர்த்தி என்று உரைத்தி' தன்மையால்

வெவ்வியது, அன்னையால் விளைந்தது, ஈண்டு ஒரு
கவ்வை என்று என்று இறையும் தன் கருத்தின் நோக்கலன்
எவ் அருள் எவையின் வைத்தது, இன் சொலால்,
அவ் அருள் அவன் வயின் அருளுக என்றி யால்.

வேண்டினென் இவ் வரம் என்று, மேலவன்
ஈண்டு அருள் எம்பிபால் நிறுவி, ஏகினை,
பூண்ட மாதவனொடும் கோயில் புக்கு, எனது
ஆண் தகை வேந்தனை அவலம் ஆற்றி, பின்.

'ஏழ் - இரண்டு ஆண்டும் நீத்து, ஈண்ட வந்து உனைத்
தாழ்குவென் திருவருடி; தப்பிலேன்' எனச்
சூழி வெங் களிற்று இறை தனக்குச் சோர்வு இலா
வாழி மா தவன் சொலால் மனம் தெருட்டுவாய்,

முறைமையால் எற் பயந்தெடுத்த மூவர்க்கும்
குறைவு இலா என் நெடு வணக்கம் கூறி, பின்
இறைமகன் துயர் துடைத்து இருத்தி, மாடு —

சுமந்திரன் :

(தனக்குள்)

'ஆள்வினை, ஆணையின் திறப்பல் அன்று' —
'ஊழ்வினை வசத்து உயிர் நிலை'
(வாள்விழிச் சனகியை நோக்க)

சீதை :

.... தேர்வல!-அரசர்க்கு, அத்தையர்க்கு

என்னுடை வணக்கம் முன் இயம்பி, யானுடைப்
பொன் நிறப் பூவையும், கிளியும் போற்றுக என்று
உன்னும் என் தங்கையர்க்கு உணர்த்துவாய்

இராமன் !

சோதிமணித் தேர் சுமந்திர! - தீங்கு உறின்
யார் வலார்? உயிர் துறப்பு எளிது அன்றே.

சுமந்திரன் :

(பொருமி விம்மி) போர் வலாய்!

விடை தந்தீக.

—(இலக்குவனை நோக்கி)

இளைய மைந்த!

கூறுவது யாது?

இலக்குவன் :

உரை செய்து எம் கோமகற்கு உறுதி ஆக்கிய

தரை கெழு திருவினைத் தவிர்த்து, மற்று ஒரு

விரை செறி குழலி மாட்டு அளித்த மெய்யனை

அரைசன் என்று இன்னம் ஒன்று அறையற் பாலதோ?

கானகம் பற்றி நல் புதல்வன் காய் உண,

போனகம் பற்றிய பொய்இல் மன்னற்கு, இங்கு

ஊனகம் பற்றிய உயிர்கொடு, இன்னும் போய்

வானகம் பற்றிலா ? வலிமை கூறு—

மின்னுடன் பிறந்த வாள் பரத வேந்தற்கு, 'என்

மன்னுடன் பிறந்திலென்; மண் கொண்டு ஆள்கின்றான்—

தன்னுடன் பிறந்திலென்: தம்பி முன் அலென்;

என்னுடன் பிறந்த யான் வலியன்' என்றியால்.

இராமன் : ஐய ! நீ,

சீரிய அல்லன செப்பல்.

(சுமந்திரன் பாரிடை வணங்கினன்;

தேர்ப் பொறி பூட்டினன். புரவி ஓட்டினன். ஒருவரும்
உணர்வுறாமலே—

தையல் தன் கற்பும், தன் தகவும், தம்பியும்,

மைஅறு கருணையும், உணர்வும், வாய்மையும்,

செய்ய தன் வில்லுமே, சேமமாகக் கொண்டு,

ஐயனும் போயினான், அல்லின் நாப்பணே

பொழுது புலர பொதுமக்கள் தாமரைக் கண்

கருமுகிலைக் காணார்; பேதுற்றார்)

மக்கள் : (1) பொருந்தா நயனம் பொருந்தி, நமைப் போன்றச்
சூழ்ந்த

(2) விட்டுப் பிரிந்தான் நமை—வெய்ய வயன் வினை;

(3) ஒட்டிப் படர்ந்த தண்டகம், இவ் உலகத்து உளது அன்றோ? உணர்வைச்
சுட்டுச் சேர்தல் பழுது அன்றோ? தொடர்தும் தேரின் சுவடு.

(4) ஆரும் அஞ்சல் ; ஐயன் போய் அயோத்தி அடைந்தான்.

(5) தேர் ஆழி காணீர் !

(6) எயில் மா நகரம் எய்துதும்!
(மக்கள் திரும்புதல்)

## காட்சி—14

இடம் : தயரதன் கோவில்

இருப்போர் : தயரதன், வசிட்டன், தேவியர் மூவர், தோழியர் காவலர், சுமந்திரன், தேர்ப்பாகன்)

வசிட்டன் : (விம்மி)

நின்று உயர் பழியை அஞ்சி நேர்ந்திலன் தடுக்க, வள்ளல்
ஒன்றும் நான் உரைத்தல் நோக்கான், கருமத்திற்கு உறுதி பார்ப்பான்;
வென்றவர் உளரோ மேலை விதியினை !

தோழி :

(தனக்குள்) தேர் கொண்டு வள்ளல் வந்தான்.

காவலன் : (சுற்றிப் பார்த்து) கார் கொண்ட மேனியானைக் கண்டிலம்
நீர் கொண்ட நெடுந்தேர்ப் பாகன் நிலை கண்டேம்
இரதம் வந்து உற்றது?

தயரதன்

(வியந்து)

மயக்கம் தீர்ந்து

பொருக்கென விழித்து நோக்கி

விரத மாதவ!

வீரன் வந்தனனோ?

வசிட்டன் :

(உரைக்கலாற்றான்)

இல்லை என்று உரைக்கலாற்றாய் !

வல்லவ! நின் முகமே நம்பி வந்திலன் என்றும் மாற்றம்
சொல்லுதும்—
(அரசன் சோர்ந்திட)

வசிட்டன் :

நான் இவ் அல்லல் காண்கில்லேன்
(முனிவன் அகலப் போக)

தயரதன் :

தேர்ப்பாக !
நம்பி சேயனோ? அணியனோ?

தேர்ப்பாகன் :

வேய் உயர் கானம், தானும், தம்பியும், மிதிலைப் பொன்னும்
போயினன்
(என்று தேர்வலான் போழ்தத்தே தயரதன் ஆவி போனான்)

கோசலை :

(விம்மி)
உயிர்ப்பு இலன், துடிப்பும் இல்லன்.
மன்னற்கு ஆர் உயிர் இன்மை ஆனதே!
(உருவம் தீண்டி, அயிர்த்து, மறுகி வீழ்ந்தாள்)
தானே! தானே! தஞ்சம் இலாதான் தகைவு இல்லான்.
போனான்! போனான்! எங்களை நீத்து, இப்பொழுது
(மெய் தடுமாறி விழ)

தோழி !

வான் நீர் சுண்டி மண் அறவற்றி மறுகுற்ற
மீனே என்ன மெய் தடுமாறி விழுகின்றாய்

கோசலை !

ஒன்றோ, நல் நாட்டு உய்க்குவர்; இந்நாட்டு உயிர் காப்பார்
அன்றே? மக்கள் பெற்று உயிர் வாழ்வார்க்கு அவம் உண்டே?
இன்றே வந்து, ஈண்டு, 'அஞ்சல்' எனாது, எம்மகன் என்பான்,
கொன்றான் அன்றோ தந்தையை !

நோயும் இன்றி, நோன்கதிர் வாள், வேல், இவை இன்றி.
மாயும் செல்வ மக்களின் ஆக; மற மன்னன்

காயும் புள்ளிக் கற்கடம், நாகம், கனிவாழை
வேயும், போன்றான்—
வடித் தாழ் கூந்தல் கேகயன் மாதே! மதியாலே
பிடித்தாய் வையம்; பெற்றனை பேரா வரம்; இன்னே
முடித்தாய் அன்றே மந்திரம்?—
அருந்துயர் மன்னா!

அருந் தேரானைச் சம்பரனைப் பண்டு அமர் வென்றாய்;
இருந்தார், வானோர், உன் அருளாலே இனிது; அன்னார்
விருந்து ஆகின்றாய்—
வேள்விச் செல்வ துய்த்தி கொல்? மெய்ம்மைத் துறை மேவும்
சூழ்வின் செல்வம் துய்த்தி கொல்! தோலா மனு நூலின்
வாழ்வின் செல்வம் துய்த்தி கொல் மன்
சுமத்திரையும் துளங்கி ஏங்கி உயிர் சோர,
மற்று ஒழிந்த தேவியரும் வந்து இரைத்தார்)

சுமந்திரன் :

(வசிட்டனை நோக்கி)
வேத முனிவ!
அரசன் தன்மை

வசிட்டன் :

(விம்மி) விதி செய்த வினை!

அமைச்சர் :

செய்யக் கடவ செயற்கு உரிய சிறுவர், ஈண்டையார் அல்லர்;
எய்தக் கடவ பொருள் எய்தாது இகவா —
மையற் கொடியாள் மகன், ஈண்டு வந்தால் முடித்தும் மற்று —
புதல்வர் பிரிந்தும் கடை ஓட மெய்த்த வேந்தன், திரு
உடம்பைத் தைலக்கடலின் தலை உய்ப்பரம்
அரிவைமார் இருவீர் !—தாஇல்கோயில் தலை செல்க!
தண் தார்ப் பரதற் கொண்டு அணைக !

வசிட்டன் : சேனாபதி சுமந்திர! —செயற்பாற்கு உரிய செய்க.

## காட்சி—15

**இடம் : கங்கைக் கரை.**

**இருப்போர் : இராமன், இலக்குவன், சீதை, முனிவர்.**

(வெய்யோன் ஒளி தன் மேனியின் விரிசோதியின் மறைய,
பொய்யோ என்னும் இடையாளொடும், இளையானொடும்,
போனான்-
மையோ, மரகதமோ, மறிகடலோ, மழை முகிலோ
ஐயோ, இவன் வடிவு என்பதோர் அழியா அழகுடையான்.

மா கந்தமும், மகரந்தமும், அளகம் தரு மதியின்
பாகம் தரு நுதலாளொடு, பவளம் தரும் இதழான்
மேகம் தனி வருகின்றது மின்னோடு என, மிளிர் பூண்
நாகம் தனி வருகின்றது பிடியோடு என, நடவா—

பலநந்து உகு தரளம் தொகு படர் பந்திகள் படு நீர்
அன்னம் துயில் வதி தண்டலை, அயல் நந்து உறை புளினம்,
சின்னம் தரும் மலர் சிந்திய செறி நந்தனவனம், நன்
பொன் உந்திய நதி, கண்டு உளம் மகிழ்ந்தனர், போனார்-)

முனிவர் :

(தமக்குள்)
எங்கள் செல்கதி வந்தது!
(காயும், கானில் கிழங்கும், கனிகளும்
தூய தேடிக் கொணர்ந்து)-
-தோன்றல்! நீ
ஆய கங்கை அரும்புனல் ஆடினை,
தீயை ஓம்பினை, செய் அமுது.
(அமரரை ஊட்டினான், விருந்துமெல் அடகு உண்டு
விளங்கினான்)

(குகன் எதிரே வர)

முனிவர் :

அம் கண் நாயக-ஆயிரம் அம்பிக்கு
நாயகன் போர்க்குகன் எனும் நாமத்தான்;
தூய கங்கைத் துறை விடும் தொன்மையான்
காயும் வில்லினன், கல்திரள் தோளினான்.

துடியன், நாயினன், தோற் செருப்பு ஆர்த்த பேர்
அடியன், அல் செறிந்தன்ன நிறத்தினான்
நெடிய தானை நெடுங்கலின், நீர் முகில்
இடியினோடு எழுந்தாலன்ன ஈட்டினான்.

காழம் இட்ட குறங்கினன், கங்கையின்
ஆழம் இட்ட நெடுமையினான், அரை
தாழ விட்ட செந்தோலன், தயங்குறச்
சூழவிட்ட தொடு புலி வாலினான் —

சிருங்கிபேரம் எனத் திரைக் கங்கையின்
மருங்கு தோன்றும் நகர் உறை வாழ்க்கையன்
(குகனை விளித்து)
ஒருங்கு தேனோடு மீன் உபகாரத்த !
இருந்து வள்ளலைக் காண வந்து எய்தினை?

இலக்குவன் : நீ,

ஆவான் யார் ?

குகன் :

தேவா ! நின் கழல் சேவிக்க வந்தனென்;
நாவாய் வேட்டுவன், நாய் அடியேன்; குகன்!

இலக்குவன் :

நிற்றி ஈண்டு
(உள் புக்கு நெடியவன் தொழுது)
கொற்றவ ! நின்னைக் காணக் குறுகினன், நிமிர்ந்த கூட்டச்
சுற்றமும், தானும், உள்ளம் தூயவன்; தாயின் நல்லான்;
எற்றுநீர்க் கங்கை நாவாய்க்குஇறை; குகன் ஒருவன்.

இராமன் :

என்பால் அழைத்தி நீ அவனை.

இலக்குவன் :

(வெளியே வந்து) வருக.
(குகன் கண்ணனைக் கண்ணின் நோக்கிக் கனிந்தனன்; இருண்ட குஞ்சி மண் உறப் பணிந்து, மேனி வளைத்து, வாய்புதைத்து நின்றான்)

இராமன் :

இருத்தி ஈண்டு.

குகன் :

தேனும் மீனும் அமுதினுக்கு அமைவது ஆகத்
திருத்தினென் கொணர்ந்தேன்; என்கொல் திருஉளம் ?

இராமன் :

எல்லை நீத்த அருத்திய !
அரிய, தாம் உவப்ப, உள்ளத்து அன்பினால் அமைந்த காதல்
தெரிதரக் கொணர்ந்த என்னால், அமிழ்தினும் சீர்த்த அன்றே ?
பரிவினின் தழீஇய எனனின் பவித்திரம், எம்மனோர்க்கும்
உரியன இனிதின் நாமும் உண்டனெம், அன்றோ ? -யாம்

இங்கு உறைந்து, எறிநீர்க் கங்கை ஒறுதும் நாளை; யாணர்ப்
பொங்கும் நின் சுற்றத்தோடும் போய் உவந்து இனிது உன் ஊரில்

தங்கி நீ நாவாயொடும் சாருதி விடியல —

குகன் :

—இப்—
பார்குலாம் செல்வ! நின்னை இங்ஙனம் பார்த்த கண்ணை
ஈர்கிலாக் கள்வனேன் யான். இன்னலின் இருக்கை நோக்கித்
தீர்கிலேன்; ஆனது, ஐய! செய்குவென் அடிமை.

இராமன் :

(சீதையை நோக்கி, தம்பி திருமுகம் நோக்கி)
—தீராக் காதலன் ஆகும்,
யாதினும் இனிய நண்ப ! இருத்தி ஈண்டு எம்மொடு

குகன் :

(பருவரல் தம்பியை நோக்கி)
திருநகர் தீர்ந்த வண்ணம், மாணவ ! தெரித்தி !

இலக்குவன் :

கொண்டாள் வரம் இரண்டு, கேகயன் கோன் கொம்பு; அவட்கு
தண்டாத செங்கோல் தயரதனும் தான் அளித்தான்:
'ஒண் தார் முகிலை வனம் போகு' என்று ஒருப்படுத்தாள்;
என் தானும் வேறு இல்லை; ஈது அடுத்தவாறு.

குகன் :

(இருகண் நீர் அருவிசோர)
—என்னே
பெருநிலக் கிழத்தி நோற்றும் பெற்றிலள் போலும்
(மாலை வாய் நியமம் செய்து மரபுளி இயற்றி, வைகல்

வேலைவாய் அமுது அன்னாளும் வீரனும் விரித்த நாணல்
மாலைவாய்ப் பாரின் பாயல் வைகினர்; வரினில் ஏந்திக்
காலைவாய் அளவும் தம்பி இமைப்பிலன் காத்து நின்றான்.
—விழித்த கண்ணன்
தம்பி நின்றானை நோக்கி, தலைமகன் தன்மை நோக்கி,
அம்பியின் தலைவன் கண்ணீர் அருவிசோர் குன்றின் நின்றான்
—நாள் மலர்ந்தது)

இராமன் :

—ஐய !
கோள் முதற்கு அமைந்த நாவாய் கொணருதி விரைவின்.

குகன் :

பொய்ம் முறை இலராய், எம் புகல் இடம் வனமே யாக:
கொய்ம் முறை உறு தாராய் ! குறைவிலெம்; வலியேமாக;
செய்ம்முறை குற்றேவல் செய்குதும்; அடியோமை
இம்முறை உறவு என்னா இனிது இரு நெடிது, எம் ஊர்;
தேன் உள; தினை உண்டாக; தேவரும் நுகர்தற்கு ஆம்
ஊன் உள ; துணை நாயேம் உயிர் உள ; விளையாடக்
கான் உள; புனல் ஆடக் கங்கையும் உளது அன்றோ?
நான் உளதனையும் நீ இனிது இரு; நட எம்பால்

இராமன் :

(வெண் நிற நகை செய்து)
—வீர ! நின்னுழை யாம் அப்
புண்ணிய நதி ஆடி, புனிதரை வழிபாடு உற்று,
எண்ணிய சில நாளில் குறுகுதும் இனிது.
(குகன் சென்றனன், விரைவொடும்;
தந்தனன் நெடு நாவாய்)
சுருதி
அந்தணீர் !
அருளுதிர் விடை.
(இந்துவின் நுதலாளொடு, இளவலோடு இனிது ஏனா)
அம்பியின் தலைவ !
விடு, நனி கடிது,
சித்திரகூடத்தின் செல் நெறி பகர்.

குகன் ;

உத்தம ! அடி நாயேன் ஓதுவது உளது,
நெறி, இரு நெறி வல்லேன்; நேடினென், வழுவாமல்,
நறியன கனி காவும் நறவு, இவை தர வல்லேன்;
உறைவிடம் அமைப்பேன் ; ஒரு நொடி வரை உம்மைப்
பிறிகிலென், உடன் ஏகப் பெறுகுவென் எனின், நாயேன்.
திருஉளம் எனின், மற்று என் சேனையும் உடனே கொண்டு,
ஒருவலென் ஒருபோதும் உறைகுவென் ; உளர் ஆனார்
மருவலர் எனின், முன்னே மாய்குவென் ; வசை இல்லேன் ;
பொரு அரு மணி மார்பா! போதுவென், உடன்

இராமன் :

என் உயிர் அனைவாய் நீ ; இளவல் உன் இளையான் ; இந்
நன்னுதலவள் நின் கேள் ; நளிர்கடல் நிலம் எல்லாம்
உன்னுடையது நான் உன் தொழில் உரிமையின் உள்ளேன்—

துன்பு உளது எனின், அன்றோ சுகம் உளது? அது அன்றிப்
பின்பு உளது; 'இடை, மன்னும் பிரிவு உளது! என உன்னேல்;
முன்பு உளெம், ஒரு நால்வேம் ; முடிவு உளது என உன்னா
அன்பு உள, இனி நாம் ஓர் ஐவர்கள் உளர் ஆனோம்,

படர் உற உளன், உம்பி கான் உறை பகல் எல்லாம்,
இடர் உறு பகையா? போய் யான் என உரியாய் நீ;
சுடர் உறு வடி வேலாய் சொல் முறை கடவேன் யான் ;
வட திசை வரும் அந்நாள், நின்றுழை வருகின்றேன் ;

அங்கு உள கிளை காவற்கு அமைதியின் உளன். உம்பி ;
இங்கு உள கிளை காவற்கு யார் உளர்? உரை செய்யாய்;
உன் கிளை எனது அன்றோ? உறுதுயர் உறல் ஆகுமோ?
என் கிளை இது கா, என் ஏவலின் இனிது.

(குகன் விடை கொண்டான் ;
அணி இழை மயிலோடும் ஐயனும் இளையோனும்
திணி மரம் நிறை கானில் சேணுறு நெறி சென்றார்)

## காட்சி—16

இடம் : கங்கைக் கரை வனம்.

இருப்போர் : இராமன், இலக்குவன், சீதை, பரத்துவாச முனிவர்.

(வெயில் இள நிலவே போல், விரிகதிர் இடை வீச,
பயில் மரம் நிழல் ஈன, பணிபுரை துளி மேகப்
புயல் தர, இள மென் கால் பூ அளவியது எய்த,
மயிலினம் நடம் ஆடும் வழி இனியன போனார்)

இராமன் :

மன்றலின் மலி கோதாய்! மயில் இயல் மட மானே!
இன்துயில் வதி கோபத்து இனம் விரி வனம் எங்கும்,
கொன்றைகள் சொரி போதின் குப்பைகள், குல மாலைப்
பொன் திணி மணி மானப் பொலிவன—பல—காணாய்!

பாண், இள மிஞிறு ஆக, படுமழை பணை ஆக,
நாணின தொகு பீலி கோலின நடம் ஆடல்,
'பூணியல் நின சாயல் பொலிவது பல கண்ணின்
காணிய' எனல் ஆகும், களி மயில்—இவை காணாய்!

அருந்ததி அனையாளே! அமுதினும் இனியாளே!
செருந்தியின் மலர் தாங்கும் செறி இதழ்வன சோகம்
பொருந்தின களிவண்டின் பொலிவன, பொன் ஊதும்
இருந்தையின் எழுதீ ஒத்து எழுவன—இயல் காணாய்!

வாள் புரை விழியாய்! உன் மலர் அடி அணி மானத்
தாள் புரை தளிர் வைகும் தகை ஞிமிறு—இவை காணாய்!
கோள் புரை இருள் வாசக் குழல் புரை மழை—காணாய்!
தோள் புரை இள வேயின் தொகுதிகள்—அவை காணாய்!

பூ நனை சினை துன்றி, புள் இடை இடை பம்பி,
நால் நிற நளிர் வல்லிக் கொடி நவை இல பல்கி
மான் இனம், மயில் மாலை குயில் இனம் வதி கானம்—
தீ நிகர் தொழில் ஆடைத் திரை பொருவன பாராய்!
(போயினர் நெறி, போதும் சென்றது குடபால்)

இராமன் :

- வினை வென்றோர் மேவு இடம்
சித்திரகூடத் திரு மலை இது அன்றோ?

பரத்து :

(தனக்குள்)
—நெடுநாளில் திருத்திய வினை முற்றிற்று இன்று;
(இராமனும் அலர் தூவி மும்முறை தொழுதான்)

இம்முறை உருவோ நான் காண்குவது ?
அகல் இடம் நெடிது ஆளும் அமைதியை; அது தீர,
புகல் இடம் எமது ஆகும் புரையிடை, இதுநாளில்,
தகவு இல தவ வேடம் தழுவினை வருவான் என்—
இகல் அடு சிலை வீர ! இளையவனோடும் ?—

இராமன் :

—கிளர் ஞாலம் வரத்தினாலே
மீட்டாள், அளித்தாள் வனம் தம்முனை, வெம்மை முற்றி,
தீட்டாத வேல் கண் சிறுதாய்.

பரதன் :

அந்தோ! விதி தரு நவை!
இற்றது செயல் உண்டோ இனி?
பெற்றிலள் தவம், அந்தோ! பெருநிலமகள்—
'துப்பு உறழ் துவர் வாயின் தூய் மொழி மயிலோடும்
அப்பு உறு கடல் ஞாலம் ஆளுதி கடிது' என்னா.
ஒப்பு அறும் மகன் உன்னை, 'உயர் வனம் உற ஏகு' என்று
எப்பரிசு உயிர் உய்ந்தான் என் துணையவன்?

அல்லலும் உள, இன்பம் அணுகலும் உள அன்றோ?
நல்லவும் உள, செய்யும் நவைகளும்; உள அன்றோ!
இல்லை ஓர் பயன் நான் இன்று இடர் உறும் இதின்.

(தனக்குள்)

உய்குவெம் இவனோடு யாம் உடன் உறைதலின்

(இராமனை நோக்கி)

கொய்குல மலர் மார்ப! கூறுவது உளது.
நிறைவும், நீர், மலர், நெடுங்கனி, கிழங்கு, காய் கிடந்த,
குறையும் அற்றன, தூய்மையால் குலவியது எம்மோடு
உறையும் இவ்வழி உயர் தவம் ஒருங்குடன் முயல்வார்க்கு
இறையும், ஈது அலாது இனியது ஓர் இடம் அரிது,
கங்கையாளொடு கரியவள், நாமகள், கலந்த
சங்கம் ஆதலின், பிரியலென்; தாமரை வடித்த
செங் கண் நாயக, அயனுக்கும், அரும் பெறல் தீர்த்தம்;
எங்கள் போலியர் தரத்தது அன்று: இருத்திர் ஈண்டு.

இராமன் :

நீண்டது அன்று இது நிறை புனல் நாட்டுக்கு; நெடுநாள்,
மாண்ட சிந்தைய ! இவ் வழி வைகுவென் என்றால்
ஈண்ட யாவரும் நெருங்குவர்.

பரதது :

ஆவது உள்ளதே; ஐய ! கேள் ! ஐ-இரண்டு அமைந்த
காவதப் பொழிற்கு அப் புறம் கழிந்தபின், காண்டி;
மேவு காதலின் வைகுதிர்-விண்ணினும் இனிதால்,
தேவர் கை தொழும் சித்திரகூடம் என்று உளதே.

(-கொன்ற வேய்ங்குழல் கோவலர் முல்லை, அம்குறிஞ்சி
வெளிறு நீங்கிய பாலையை மெல்லெனப்போனார்,
ஒளிறும் வான் மதிக் குழவி, தன்சூல் வயிற்று ஒளிப்ப,
பிளிறு மேகத்தைப் பிடி என, பெரும் பனைத்தடக்கை
களிறு நீட்டும் அச் சித்திரக் கூடத்தைக் கண்டார்)

## காட்சி—17

இடம் : சித்திரக் கூடம்.

இருப்போர் : இராமன், இலக்குவன், சீதை.

இராமன் :

வாளும் வேலும் விட்டு அளாயின அனைய கண் மயிலே ;
தாளின் ஏலமும் தமாலமும் தொடர் தரு சாரல்,
நீள மாலைய துயில்வன நீர் உண்ட கமஞ் சூல்
காளமேகமும் நாகமும் தெரிகில்—காணாய் ;

குருதி வாள் எனச் செவ் அரி பரந்த கண் குயிலே ;
மருவி மால்வரை உம்பரில் குதிக்கின்ற வருடை,
சுருதி போல் தெளி மரகதக் கொடுஞ் சுடர் சுற்ற,
பருதி வானவன் பசும் பரி புரைவன—பாராய்!

உருகு காதலின் தழை கொண்டு மழலை வண்டு ஓச்சி,
முருகு நாறு செந் தேனினை முழை நின்றும் வாங்கி,
பெருகு சூல் இளம் பிடிக்கு ஒரு பிறை மருப்பு யானை,
பருக, வாயினில். கையின் நின்று அளிப்பது—பாராய்!

ஒருவு இல் பெண்மை என்று உரைக்கின்ற உடலினுக்கு உயிரே !
மருவு காதலில் இனிது உடன் ஆடிய மந்தி
அருவி நீர் கொடு வீச, தான் அப்புறத்து ஏறி,
கருவி மாமழை உதிர்ப்பது ஓர் கடுவனைக் காணாய்!

மஞ்சு அளாவிய மாணிக்கப் பாறையில் மறைவ,
செஞ்செவே நெடுமரகதப் பாறையில் தெரிவ,
விஞ்சை நாடியர் கொழுநரோடு ஊடிய விமலப்
பஞ்சு அளாவிய சீறடிச் சுவடுகள் - பாராய்!

குழுவு நுண் தொளை வேயினும், குறி நரம்பு எறிவுற்று
எழுவு தன் தமிழ் யாழினும், இனிய சொல் கிளியே!
முழுவதும் மலர் விரிந்த நாள் முருக்கு இடை மிடைந்த
பழுவம் வெங்கனல் கதுவியது ஒப்பன—பாராய்!

(இனைய யாவையும் ஏந்திழைக்கு இளம்பினன் காட்டி;
... குங்குமச்
சேறு கொண்டு அழகுறத் திருத்தி, திண் சுவர்
ஆறு இரு மணியொடு தரளம் அப்பியே
மயிலுடைப் பீலியின் விதானம் மேல் வகுத்து,
அயிலுடைச் சுரிகையால் அருகு தூக்கு அறுத்து,
எயில் இளங் கழைகளால் இயற்றி, ஆங்கு நற்

செயலுடைப் புதுமலர் பொறப்பச் சிந்தியே.
இன்னணம் இளையவன் இழைத்த காலையில்
பொன் நிறத் திருவொடும் குடி புக்கன்)

இராமன் :

(தனக்குள்)

மேவு கானம் மிதிலையர் கோன் மகள்
பூவின் மெல்லிய பாதமும் போந்தன,
தா இல் எம்பி கை சாலை சமைத்தன;
யாவை, யாதும் இலார்க்கு இயையாதவே?

(இளையவற் பார்த்து)

— இரு
குன்று போலக் குவவிய தோளினாய்!
என்று கற்றனை நீ இது போல்?

அடரும் செல்வம் அளித்தவன் ஆணையால்,
படரும் நல் அறம் பாலித்து, இரவியின்
சுடரும் மெய்ப் புகழ் சூடினென் என்பது என்?
இடர் உனக்கு இழைத்தேன் நெடு நாள்—

இலக்குவன் :

எந்தை! காண்டி, இடரினுக்கு அங்குரம்
முந்தி வந்து முளைத்தது அன்றோ?

இராமன் :

ஆக, செய்தக்கது இல்லை, அறத்தினின்று
ஏகல் என்பது அரிது—
சோக பந்தம் துடைப்பு அரிதால்—

மன்னும் செல்வத்திற்கு உண்டு வரம்பு, இதற்கு
என்ன கேடு உண்டு? இவ் எல்லை இல் இன்பத்தை
உன்னு. மேல் வரும் ஊதியத்தோடு.
(பின்னர், இராமன் நோற்று இருந்தனன்)

## காட்சி—18

இடம் : அயோத்தி மாநகர். கைகேயின் மாளிகை வாயில்.

இருப்போர் : பரதன், சத்ருக்னன், கைகேயி, தோழி முதலானோர்.

பரதன் :

(சத்ருக்கனை நோக்கி)
மன்னன் வைகும் வளநகர் போலும் ஈது?
என்ன தன்மை? இளையவனே !

கேட்டிலன் முரசின் கிளர் ஓதையே !
தேரும், மாவும், களிறும், சிவிகையும்
ஊரும் பண்டியும், ஊருநர் இன்மையால்
யாரும் இன்றி, எழில் இல ; வீதிகள்—!

வேற்று அடங்கலர் ஊர் என மெல்லிதால் ;
சூல் தடங் கருங் கார் புரை தோற்றத்தான்
சேல் தடங்கண் திருவொடும் நீங்கிய
பால் தடங்கடல் ஒத்தது பார் !

சத்ருக்னன் :

(இருகை கூப்பி)

—எய்தியது

ஒரு வகைத்து அன்று உறு துயர் ! ஊழி வாழ்

திரு நகர்த் திரு தீர்ந்தனள் ஆம்.

—தந்தை சார்விடம் மேவுவோம்

எய்தி வேந்தனை எங்கணும் கண்டிலன்)

ஐயனை நாடு வரய்

தோழி :

கூயள் அன்னை ; குறுகுதிர் ஈண்டு ;

(வந்து தாயை அடியில் வணங்கலும், சிந்தை ஆரத் தழுவினள்)

அந்தம் இல் குணத்தாய் !

கைகேயி :

தீது இலர்

எந்தை, என்னையர், எங்கையர் ?

பரதன் :

அது ஆம்.

மூண்டு எழு காதலால், முளரித் தாள் தொழ

வேண்டினென், எய்தினென், உள்ளம் விம்முமால் ;

ஆண் தகை நெடு முடி அரசர் கோமகன்

யாண்டையன்? பணித்திர்

கைகேயி :

தானவர் வலி தவ நிமிர்ந்த தானை அத்

தேன் அமர் தெரியலான், தேவர் கைதொழ,

வானகம் எய்தினான் ; வருந்தல் நீ.

(நெறிந்து அலர் குஞ்சியான், நெடிது வீழ்ந்தனன்;

அறிந்திலன் , உயிர்த்திலன்,

வாய் ஒளி மழுங்க, தன் மலர்ந்த தாமரை

ஆய் மலர் நயனங்கள் அருவி சோர்தர)

பரதன் :

தீ எரி, செவியில் வைத்தனைய தீய சொல்,

நீ அலது உரைசெய நினைப்பரோ?

(எழுந்தனன்; ஏங்கினன்; ஏங்கிப் பின்னரும்
விழுந்தனன் ; விம்மினன்; வெய்து உயிர்த்தனன்;
அழிந்தனன்; அரற்றினன்; அரற்றி இன்னன
மொழிந்தனன், பின்னரும்—)

பரதன் :

அறம்தனை வேர்அறுத்து அருளைக் கொன்றனை!
சிறந்த நின் தண்ணளித் திருவைத் தேசு அழித்து,
இறந்தனை ஆம் எனின், இறைவ ! நீதியை
மறந்தனை; உனக்கு, இதின் மாசு மேல் உண்டோ?

செவ்வழி உருட்டிய திகிரி மன்னவ !
எவ்வழி மருங்கினும் இரவலாளர் தாம்,
இவ்வழி உலகினில்; இன்மை நண்ணினோர்
அவ்வழி உலகினும் உளர் கொலோ?—ஐய !

இம்பர் நின்று ஏகினை; இருக்கும் சார்பு இழந்து,
உம்பர் வந்து உன் கழல் ஒதுங்கினார்களோ?
சம்பரன் அனைய அத்தானைத் தானவர்,
அம்பரத்து இன்னமும் உளர் கொலாம்?—ஐயா !

பற்று, இலை தவத்தினின் பயந்த, மைந்தற்கு
முற்று உலகு அளித்து, அது முறையின் எய்திய
கொற்ற நல் முடி மணக் கோலம் காணவும்
பெற்றிலை போலும் நின் பெரிய கண்களால்?

(ஆற்றலன், இன்னன பன்னி ஆவலித்து,
ஊற்று உறு கண்ணினன், உருகுவான்; தனைத்
தேற்றினன் ஒரு வகை;)

பரதன் :

எந்தையும், யாயும், எம்பிரானும், எம்முனும்
அந்தம் இல் பெருங் குணத்து இராமன்; ஆதலால்
வந்தனை அவன் கழல் வைத்த போது அலால்,
சிந்தை வெங் கொடுந்துயர் தீர்கலாது.

கைகேயி :

தெவ் அடு சிலையினாய் ! தேவி, தம்பி, என்று
இவ் இருவோரொடும் கானத்தான்.

பரதன் ;

(நெருப்புண்டான் என)
வினைத் திறம் யாது இனி விளைப்பது ? இன்னமு
எனைத்து உள கேட்பன துன்பம், யான் ?
-அப்

பூங் கழல் காலவன் வனத்துப் போயது
திங்கு இழைத்த அதனினோ ? தெய்வம் சீறியோ
ஒங்கிய விதியினோ ? யாதினோ ?

தீயன இராமனே செய்யுமேல், அவை
தாய் செயல் அல்லவோ, தலத்துளோர்க்கு எலாம்
போயது தாதை விண் புக்க பின்னரோ ?
ஆயதன் முன்னரோ ? அருளுவீர்.

கைகேயி :

குருக்களை இகழ்தலின் அன்று, கூறிய
செருக்கினால் அன்று, ஒரு தெய்வத்தாலும் அன்று,
அருச்சனே அனைய அவ் அரசர் கோமகன்
இருக்கவே, வனத்து அவன் ஏகினான்.

பரதன் :

குற்றம் ஒன்று இல்லையேல், கொதித்து வேறு உளோர்
செற்றதும் இல்லையேல், தெய்வத்தால் அன்றேல்,
பெற்றவன் இருக்கவே, பிள்ளை கான் புக
உற்றது என் ? தெரிதர உரை செய்வீர்.

கைகேயி :

வாக்கினால் வரம் தரக் கொண்டு, மைந்தனைப்
போக்கினேன், வனத்திடை, போக்கி, பார் உனக்கு
ஆக்கினேன், அன்னது பொறுக்கலாமையால்,
நீக்கினான் தன் உயிர் நேமி வேந்து.

(சூடின மலர்க் கரம், சொல்லின் முன் செவி
கூடின, புருவங்கள் குனித்துக் கூத்து நின்று
ஆடின, உயிர்ப்பினோடு, அழல் கொழுந்துகள்
ஓடின; உமிழ்ந்தன, உதிரம் கண்களே
துடித்தன கபோலங்கள், சுற்றும் தீச் சுடர்

பொடித்தன மயிர்த்தொளை, புகையும் போர்த்தது,
மடித்தது, நெடுமழைக் கை, மண் பக
அடித்தன, ஒன்றொடு ஒன்று அசனி அஞ்சனே)

பரதன் :

மாண்டனன் எந்தை, என் தம்முன் மாதவம்
பூண்டனன், நின் கொடும் புணர்ப்பினால், என்றால்
கீண்டிலென் வாய், அது கேட்டும் நின்ற யான்
ஆண்டனெனே அன்றோ அரசை ஆசையால் ?

நீ இனம் இருந்தனை, யானும், நின்றனென்,
"ஏ" எனும் மாத்திரத்து ஏற்றுகிற்றிலென்,
ஆயவன் முனியும் என்று அஞ்சினேன் அலால்,
"தாய்" எனும் பெயர் எனைத் தடுக்கற் பாலதோ ?

மாளவும் உளன், ஒரு மன்னன் வன் சொலால்,
மீளவும் உளன் ஒரு வீரன், மேய பார்
ஆளவும் உள்ள ஒரு பரதன்; ஆகினால்,
கோள் இல அற நெறி ! குறை உண்டாகுமோ ?

இறந்தான் தந்தை, 'ஈந்த வரத்துக்கு இழிவு' என்னா,
'அறந்தான் ஈது' என்று அன்னவன் மைந்தன் அரசு எல்லாம்
துறந்தான், தாயின் சூழ்ச்சியின் ஞாலம் அவனோடும்
பிறந்தான், ஆண்டான், என்னும் இது என்னால் பெறலாமே ?

'வில் ஆர் தோளான் மேவினன், வெங்கானகம், என்ன
நல்லான் அன்றே துஞ்சினன், நஞ்சே அனையாளைக்
கொல்லேன், மாயேன், வன் பழியாலே குறைவு அற்றேன்—
அல்லேனோ யான் ! அன்பு உடையார் போல் அழுகின்றேன்.

கொன்றேன், நான் என் தந்தையை, மற்று உன் கொலை
வாயால்—
ஒன்றோ ? கானத்து அண்ணலை உய்த்தேன், உலகு ஆள்வான்
நின்றேன் என்றால், நின் பிழை உண்டோ ? பழி உண்டோ ?
என்றேனும் தான் என் பழி மாயும் இடம் உண்டோ ?
- யானும், இப்
பன்ன அருங் கொடு மனப் பாவி பாடு இரேன்,
துன்ன அருந்துயர் கெட, தூய கோசலை
பொன் அடி தொழுவேன்—
(என்று எழுந்து போயினான்)

## காட்சி—19

இடம் : கோசலையின் மாளிகை.

இருப்போர் : பரதன், கோசலை,

(பரதன் மண் கிழிதர வீழ்ந்து கோசலை கமலச் சேடி பூண்டனன்

பரதன் :

(புலம்பி) குலம், பொறை, கற்பு இவை சுமந்த அன்னையே!
எந்தை எவ் உலகு உளான்? எம்முன் யாண்டையான்?
வந்தது தமியென், இம்மறுக்கம் காணவோ?
சிந்தையின் உறு துயர் தீர்த்திரால்—

கொடியவர் யாவரும் வேர்அற
நெடிகுவன் யான், அது நுவல்வது எங்ஙனம்?
கடியவள் வயிற்றினில் பிறந்த கள்வனேன்.
முடிகுவென் அருந்துயர் முடிய—

இரதம் ஒன்று ஊர்ந்து. பார் இருளை நீக்கும் அவ்
வரதனில் ஒளி பெற மலர்ந்த தொல் குலம்,
'பரதன்' என்று ஒரு பழி படைத்தது—

வாள் தொடு தானையான் வானில் வைகிட
காடு ஒரு தலைமகன் எய்த. கண் இலா
நாடு ஒரு துயரிடை நைவதே—

கோசலை :

(தனக்குள்) புலம்புறுகுருசில்
நிலம் பொறை ஆற்றலன், நெஞ்சம் தூயது
மை அறு மனத்து ஒரு மாசு உளான் அலன்,
செய்யனே
(பரதனை நோக்கி)
கைகயர் கோமகள் இழைத்த கைதவம்
ஐய! நீ அறிந்திலை போலுமால்?

பரதன் :

(குமுறி விம்மி)
அறம் கெட முயன்றவன், அருள் இல் நெஞ்சினன்,
பிறன் கடை நின்றவன், பிறரைச் சீறினோன்,

மறம் கொடு மன்னுயிர் கொன்று வாழ்ந்தவன்,
துறந்த மாதவர்க்கு அருந்துயரம் சூழ்ந்துளோன்

குரவரை, மகளிரை, வாளின் கொன்றுளோன்,
புரவலன் தன்னொடும் அமரில் புக்கு உடன்
விரவலர் வெரிநிடை விழிக்க, மீண்டுளோன்,
இரவலர் அருநிதி எறிந்து வெளவினோன்

தாய் பசி உழந்து உயிர் தளர. தான் தனி,
பாய் பெரும் பாழ் வயிறு அளிக்கும் பாவியும்
நாயகன் பட, நடந்தவனும் நண்ணும் அத்
தீ எரி நரகத்துக் கடிது செல்க யான்.

கன்று உயிர் ஓய்ந்து உசக் கறந்து பால் உண்டோன்
மன்றிடைப் பிறர் பொருள் மறைத்து வவ்வினோன்
நன்றியை மறந்திடும் நயம்இல் நாவினோன்
என்று இவர் உறு நரகு என்னது ஆகவே.

ஆறு தன்னுடன் வரும் அம் சொல் மாதரை
ஊறு கொண்டு அலைக்க, தன் உயிர் கொண்டு ஓடினோன்
சோறு தன் அயலுளோர் பசிக்கத் துய்த்துளோன்,
ஏறும் அக் கதியிடை யானும் ஏறவே.

தஞ்சு என ஒதுங்கினோர் தனது பார் உளோர்
எஞ்சல் இல் மறுக்கினோடு இரியல் போயுற,
வஞ்சி சென்று இறுத்தவன் வாகை மீக் கொள,
அஞ்சின மன்னவன் ஆக யானுமே

கன்னியை அழி செயக் கருதினோன், ஒரு
பன்னியை நோக்கினோன் பருகினோன் நறை
பொன் இகழ் களவினில் பொருந்தினோன், எனும்
இன்னவர் உறு கதி என்னது ஆகவே,

கோசலை

தூய வாசகம் சொன்ன தோன்றலே!
முன்னை நும் குல முதலுளோர்கள் தாம்.
நின்னை யாவரே நிகர்க்கும் நீர்மையார்?
மன்னர் மன்னவா! மறுஇல் மைந்தனே வள்ளல், உந்தையார்,
இறுதி எய்தி நாள் ஏழ்—இரண்டின்,
சிறுவர் செய் கடன் செய்து தீர்த்தி-(அடி இறைஞ்சி போயினான்,

## காட்சி—20

இடம் : சரயு நதிக் கரை.

இருப்போர் : மந்திரக் கிழவர், பரதன், சத்ருக்கன், வசிட்டன்.

மந்திரக் கிழவர் :

—வீர! நுந்தை பால்
பொய் இல் மாக் கடன் கழித்தி போந்து.

வசிட்டன் :

எழுந்த வீர !
அன்னை தீமையால் அரசன் நின்னையும்
துன்னு துன்பத்தால், துறந்து போயினான்,
முன்னரே—

பரதன் :

(துயரம் தன்னுள்ளே துடிக்க, விம்மி நின்று அழுது)
உரை செய் மன்னர் மற்று என்னில் யாவரே ?
இரவிதன் குலத்து, எந்தை முந்தை யோர்
பிரத பூசனைக்கு உரிய பேறு இலேன்;
அரசு செய்யவோ அமைவது ஆயினேன் !

துன்னு தாள் வளம் சுமந்த தாழையில்
பன்னு வான் குலைப் பதடி ஆயினேன்;
என்னை ! என்னையே ஈன்று காத்த என்
அன்னையார் எனக்கு அழகு செய்தவா !

(சத்ருக்கனை நோக்கி)

— இளைய தோன்றலே !
இன்று நேர் கடன் அமைவது ஆக்குக

(இயைய செய்த பின்—
மனையின் எய்தினர்)

## காட்சி—21

இடம் : அரசவை.

இருப்போர் : பரதன், வசிட்டன், சுமந்திரன், மந்திரக் கிழவர்.
நகர மாந்தர் முதலானோர்

வசிட்டன் :

சுந்தரக் குரிசில் !
காக்குதி உலகம்; நின் கடன் இது ஆம்.

வேதியர், அருந்தவர், விருத்தர், வேந்தர்கள்
ஆதியர், நின் வயின் அடைந்த காரியம்,
நீதியும் தருமமும் நிறுவ நீ இது
கோது அறு குணத்தினாய் ! மனத்துக் கோடியால்.

வள் உறு வயிர வாள் அரசு இல் வையகம்,
நள் உறு கதிர் இலாப் பகலும், நாளொடும்
தெள் உறு மதி இலா இரவும், தேர்தரின்
உள் உறை உயிர் இலா உடலும், ஒக்குமே.

உந்தையோ இறந்தனன்; உம்முன் நீத்தனன்;
வந்ததும், அன்னை தன் வரத்தில்; மைந்த! நீ,
அந்தம் இல் பேர் அரசு அளித்தி; அன்னது
சிந்தனை எமக்கு —
தஞ்சம் இவ் உலகம், நீ தாங்குவாய்.

பரதன் :

(நடுங்கி நாத்தடுமாறி, நாட்டமும் இடுங்கி,
உயிர் ஒடுங்கி, உணர்வு கைதர)

மூன்று உலகினுக்கும் ஓர் முதல்வன் ஆய், முதல்
தோன்றினன் இருக்க, யான் மகுடம் சூடுதல்
சான்றவர் உரை செயத் தருமம் ஆதலால்;
ஈன்றவள் செய்கையில் இழுக்கு உண்டாகுமோ ?

அடைவு அருங் கொடுமை என் அன்னை செய்கையை,
நடைவரும் தன்மை நீர, 'நன்று இது' என்றிரேல்,
இடைவரும் காலம் ஈண்டு இரண்டு நீத்து இது
கடை வரு தீ நெறிக் கலியின் ஆட்சியோ!

நல் நெறி என்னினும், நான் இந் நானில
மண் உயிர்ப் பொறை சுமந்து இருந்து வாழ்கிலேன்;
அன்னவன் தனைக் கொணர்ந்து, அலங்கல் மா முடி
தொல் நெறி முறைமையின் சூட்டிக் கண்டிரால்.

அன்று எனின், அவனோடும் அரிய கானிடை
நின்று, இனிது இருந்தவம், நெறியின் ஆற்றுவென்;
ஒன்று இனி உரைக்கின், என் உயிரை நீக்குவென்.

அவையிலருள்

1 ஆன்ற பேர் அரசனும் இருப்ப, ஐயனும்
ஏன்றனன் மணிமுடி; ஏந்தல் வேந்த! நீ,
வான் தொடர் திருவினை மறுத்தி; மன் இளந்
தோன்றல்கள் யார் உளர் நின்னின் தோன்றினார்?

2 ஆழியை உருட்டியும், அறங்கள் போற்றியும்,
வேள்வியை இயற்றியும், வளர்க்க வேண்டுமோ ?
ஏழினோடு ஏழ் எனும் உலகம் எஞ்சினும்
வாழிய நின் புகழ்!

பரதன் :

—தம்பி! கொண்டலின்
முரசு அறைந்து 'இந்நகர் முறைமை வேந்தனைத்
தருதும் ஈண்டு' என்பது சாற்றி தானையை
'விரைவினில் எழுக' என விளம்புவாய்!

மந்தரை :

(சத்ருக்கனை நோக்கி)
-இளவல்
அந்தரத்து ஏற்றுவாய்!

சத்ருக்கன் :

என்கை அழன்று பற்றுவாய்!

பரதன் :

இளையாய்!
முன்னையர் முறை கெட முடித்த பாவியைச்
சின்னபின்னம் செய்து என் சினத்தைத் தீர்வெனேல்,
'என்னை இன்று என் ஐயன் துறக்கும்' என்று அலால்
'அன்னை' என்று உணர்ந்திலன், ஐய! நான்

ஆதலால், முனியும் என்று ஐயன், அந்தம் இல்
வேதனைக் கூனியை வெகுண்டும் என்னினும்,
கோதுஇலா அருமறை குலவும் நூல்வலாய்!
போதும் நாம்.

(மொய் பெருஞ் சேனையும் மூரி ஞாலமும
கை கலந்து அயல் ஒரு கடலின் சுற்றிட
ஐயனும் தேவியும இளைய ஆளியும்
வைகிய சோலையில் வைகி-
'ஆண்டு நின்று, ஆண் தகை, அடியின் ஏகினான்
ஈண்டிய நெறி' - என, தானும் ஏகினான்
தூண்டிடு தேர்களும் துரக ராசியும்
காண் தரு கரிகளும் தொடர, காலினே)

## காட்சி—22

இடம் : கங்கையின் வடகரை.

இருப்போர் : குகன், குகனது தோழன், சுமந்திரன், பரதன்

குகனது தோழன் :

அடிமிசைத் தூளிபுக்கு அடைந்த தேவர்தம்
முடிஉறப் பரந்தது ஓர் முறைமை தேர்ந்திலெம்;
நெடிது உயிர்த்து உண்டவும், நீந்தி நின்றவும்,
பொடி மிசைப் புரண்டவும், புரளி ஈட்டமே
(தொகை முரண் சேனையைத் துகளின் நோக்கி,
நகை மிக, கண்கள் தீ நாற, நாசியில் புகை உற )

குகன் :

துப்புடைக் கடலின் நீர் சுமந்த மேகத்தை
ஒப்புடை அண்ணலோடு உடற்றவே கொலாம்
இப்படை எடுத்தது?
கிட்டியது அமர்!
(உவந்து கூவி)
ஊன்றிய சேனையை உம்பர் ஏற்றுதற்கு,
ஏன்றனென், என் உயிர்த் துணைவற்கு ஈகுவான்
ஆன்ற வேரீ ஆரசு; நீர் அமைதிர் ஆம்.

துடி ஏறி; நெறிசளும், துறையும், சுற்றுற
ஒடி யெறி; அம்பிகள் யாதும் ஓட்டலிர்
கடி எறி கங்கையின் கரை வந்தோர்களைப்
பிடி எறி, பட!

குகனது தோழன் :

(வியப்புடன்)

கட்டிய சுரிகையன் நம் குகன்
கடித்த வாயினன்; வெட்டிய மொழியினன்
விழிக்கும் தீயினன்; கொட்டிய துடியினன்.

குகன் :

அஞ்சன வண்ணன், என் ஆர் உயிர் நாயகன், ஆளாமே
வஞ்சனையால் அரசு எய்தி மன்னரும் வந்தாரே!
செஞ்சரம் என்பன தீ உமிழ்கின்றன, செல்லாவோ?
உஞ்சு இவர் போய்விடின் நாய்க்குகன்' என்று எனை ஓதாரோ?

ஆழநெடும் திரை ஆறு கடந்து இவர் போவாரோ?
வேழ நெடும் படை கண்டு விலங்கிடும் வில்லாளோ?
'தோழமை' என்று அவர் சொல்லிய சொல் ஒரு சொல் அன்றோ?
''ஏழைமை வேடன் இறந்திலன்'' என்று எனை ஏசாரோ?

அருந்தவம் என் துணை ஆள, இவன் புவி ஆள்வானோ?
மருந்து எனின் அன்று உயிர்; வண் புகழ் கொண்டு, பின் மாயேனோ?
பொருந்திய கேண்மை உகந்தவர் தம்மொடு போகாதே
இருந்தது நன்று; கழிக்குவென் கட, இன் கடன் இன்றோட.

'ஆடு கொடிப் படை சாடி' அறத்தவரே ஆள
வேடு கொடுத்தது, பார்' எனும் இப்புகழ் மேவீரோ
நாடு கொடுத்த என் நாயகனுக்கு இவர், நாம் ஆளும்
காடு கொடுக்கிலர் ஆகி, எடுத்தது காணீரோ?

சுமந்திரன் :

(பரதனை நோக்கி)

கங்கை இரு கரை உடையான்; கணக்கு இறந்த நாவாயான்;
உங்கள் குலத் தனி நாதற்கு உயிர்த் துணைவன்; உயர் தோளான்;
வெங் கரியன் ஏறு அணையான்; வில் பிடித்த வேலையினான்;
கொங்கு அலரும் நறுந்தண் தார்க் குகன் என்னும் குறி உடையான்.

கல் காணும் திண்மையான்; கரை காணாக் காதலான்;
அற்கு ஆணி கண்டனைய அழகு அமைந்த மேனியான்;—
மல் காணும் திரு நெடுந் தோள் மழை காணும் மணி நிறத்தாய்
நிற் காணும் உள்ளத்தான், நெறி எதிர் நின்றனன்—

பரதன் :

மன் முன்னே தழீஇக் கொண்ட மனக்கு இனிய துணைவனேல்,
என் முன்னே அவற் காண்பென், யானே சென்று—
(என்று பரதன் நிற்க, குகன் கண்டான்)

குகன் :

(தனக்குள்)
வற்கலையின் உடையானை; மாசு அடைந்த மெய்யானை
நற் கலை இல் மதி என்ன நகை இழந்த முகத்தான்
கல் கனியக் கனிகின்ற துயரானை கண்ணுற்றேன்.

(உரத்து) நம்பியும் என் நாயகனை ஒக்கின்றான்; அயல் நின்றான்!
தம்பியையும் ஒக்கின்றான்; தவ வேடம் தலை நின்றான்;
துன்பம் ஒரு முடிவு இல்லை; திசை நோக்கித் தொழுகின்றான்;
எம்பெருமான் பின் பிறந்தார் இழைப்பரோ பிழைப்பு?

உண்டு இடுக்கண் ஒன்று உடையான், உலையாத அன்பு உடையான்,
கொண்ட தவ வேடமே கொண்டிருந்தான் குறிப்பு எல்லாம்
கண்டு, உணர்ந்து, பெயர்கின்றேன்; காமின்கள் நெறி!

குகனது தோழன் :

தண் துறை,ஓர் நாவாயில் ஒரு தனியே செல்கிறாய்!
(வியப்புடன்)
வந்து எதிரே தொழுதானை வணங்கினான்; மலர் இருந்த
அந்தணனும் தனை வணங்கும் அவனும், அவன் அடி வீழ்ந்தான்;
தந்தையினும் களிகூரத் தழுவினான் - தகவு உடையோர்
சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்கும் சீர்த்தியான்!

குகன் :

எழுவினும் உயர்ந்த தோளாய்! எய்தியது என்னை?

பரதன் :

முழுது உலகு அளித்த முந்தையோர் முறையினின்றும்
வழுவினன்; அதனை நீக்கி, மன்னனைக் கொணர்வான் வந்தேன்

(கிராதர் வேந்தன் கிளர்ந்து எழும் உயிர்ப்பன் ஆகி,
மண் அதனில் வீழ்ந்து, விம்மி, உவகை பொங்க,
தீட்டஅரு மேனி மைந்தன் சேவடிக் கமலப் பூவில்
பூட்டிய கையனாகி)

குகன் :

தாய் உரை கொண்டு தாதை உதவிய தரணி தன்னை
'தீவினை' என்ன நீத்து சிந்தனை முகத்தில் தேக்கி
போயினை என்ற போழ்து, புகழ்னோய்! தன்மை கண்டால்,
ஆயிரம் இராமர் நின் கேழ் ஆவரோ, தெரியின் அம்மா.

என் புகழ்கின்றது, ஏழை எயினனேன்? இரவி என்பான்—
தன புகழ்க் கற்றை, மற்றை ஒளிகளைத் தவிர்க்குமா போல்,
மன் புகழ் பெருமை நுங்கள் மரபினோர் புகழ்கள் எல்லாம்
உன் புகழ் ஆக்கிக் கொண்டாய்—உயர் குணத்து உரவுத்
தோளாய்!

பரதன் :

எவ்வழி உறைந்தான் நம் முன்?

குகன் :

இவ் வழி வீர, யானே காட்டுவல்; எழுக!
(கார் எனக் கடிது சென்றான்; கல்லிடைப் படுத்த புல்லின்,
வார் சிலைத் தடக்கை வள்ளல், வைகிய பள்ளிகண்டான்;
பார் மிசைப் பதைத்து வீழ்ந்தான்; பரவரற்பரவை புக்கான்—
வாள் மணிப் புனலால் மண்ணை மண்ணு நீர் ஆட்டும்
கண்ணான்)

பரதன் :

இயன்றது. என் பொருட்டினால், இவ் இடர் உனக்கு என்ற
போழ்தும்
அயின்றனை, கிழங்கும் காயும் அமுது என? அரிய புல்லில்
துயின்றனை; எனவும் ஆவி துறந்திலென்; சுடரும் காசு
குயின்று உயர் மகுடம் தரும் செல்வமும் கொள்வென் யானே!

— அந்
நீண்டவன் துயின்ற சூழல் இது எனின், நிமிர்ந்த நேயம்
பூண்டவன், தொடர்ந்து பின்னே போந்தவன், பொழுது நீத்தது
யாண்டு ?

குகன் :

அல்லை ஆண்டு அமைந்த மேனி அழகனும் அவளும் துஞ்ச,
வில்லை ஊன்றிய கையோடும், வெய்து உயிர்ப்போடும்
கல்லை ஆண்டு உயர்ந்த தோளாய்!-கண்கள் நீர்சொரிய கங்குல்
எல்லை காண்பு அளவும் நின்றான்; இமைப்பிலன் நயனம்—

பரதன் :

-இராமனுக்கு இளையர் என்று
முன்பு ஒத்த தோற்றத்தேமில், யான் என்றும் முடிவு இலாத
துன்பத்துக்கு ஏது ஆனேன்; அவன், அது துடைக்க நின்றான்;
அன்பத்துக்கு எல்லை உண்டோ? அழகிது, என் அடிமை!—
தெவ் இடைதர நின்று ஆர்க்கும் செறிகழல் புளிஞர் கோமாஅன்
இவ் இடை கங்கை ஆற்றின் ஏற்றினை ஆயின், எம்மை
வெவ் இடர்க்கடல் நின்று ஏற்றி, வேந்தன் பால் விடுத்தது -

குகன் :

நன்று
-தம்ரீர்! சென்று நாவாய்
இனித் தருதிர்.

குகனது தோழன் :

செலவின் நாவாய் கொணர்தும்
(நாவாய் வந்தன)

குகன் :

வந்தன, வரம்பு இல் நாவாய்; வரி சிலைக்குரிசில் மைந்த!
சிந்தனை யாவது ?

பரதன் :

(சுமந்திரன் தன்னை நோக்கி)
எந்தை! இத் தானை தன்னை ஏற்றுதி, விரைவின்.
(கரி, பரி, இரதம், காலாள், கணக்கு அறு கரை இல் வேலை
எரி மணி திரையின் வீசும் கங்கையாறு ஏறிற்று)

குகன் :

(கோசலையைச் சுட்டி)

கொற்றத் தார்க் குரிசில்! இவர் யார்?

பரதன் :

-கோக்கள் வைகும்

முற்றத்தான் முதல் தேவி; மூன்று உலகும் ஈன்றானை முன் ஈன்றானைப்

பெற்றத்தால் பெறும் செல்வம், யான் பிறத்தலால், துறந்த பெரியாள்

கோசலை :

இவன் யார்?

பரதன் :

இன்துணைவன் இராகவனுக்கு, இலக்குவற்கும் இளையவர்க்கும் எனக்கும் மூத்தான்

குன்று அனைய திருநெடுந்தோள் குகன் என்பான் இந் நின்ற குரிசில்,

கோசலை :

நைவீர் அலீர் மைந்தீர்! இனித் துயரால்; நாடு இறந்து காடு நோக்கி

மெய்வீரர் பெயர்ந்ததுவும் நலம் ஆயிற்று ஆம் அன்றே! விலங்கல் திண்தோள்

கைவீரக் களிறு அனைய காளை இவன் தன்னோடும் கலந்து நீவிர்

ஐவீரும் ஒருவீர் ஆய், அகல் இடத்தை நெடுங்காலம் அளித்திர்.

குகன் :

(அறம் தானே என்கின்ற அயல் நின்றாள் தனைநோக்கி)

—ஐய! அன்பின்

நிறைந்தாளை உரை.

பரதன் :

நெறி திறம்பாத் தன் மெய்யை நிற்பது ஆக்கி

இறந்தான் தன் இளந் தேவி; யாவர்க்கும் தொழுகுலம் ஆம் இராமன் பின்பு

பிறந்தானும் உளன் என்னப் பிரியாதான் தனைப் பயந்த பொரியாள்

குகன் :

(கொடுமையால் அளந்தாளை நோக்கி)
'ஆர் இவர்?' என்று உரை

பரதன் :

படர் எலாம் படைத்தாளை பழி வளர்க்கும் செவிலியை, தன் பாழ்த்த பாவிக்
குடரிலே நெடுங்காலம் கிடந்தேற்கும் உயிர்ப் பாரம் குறைந்து தேய,
உடர் எலாம் உயிர் இலா எனத் தோன்றும் உலகத்தே, ஒருத்தி அன்றே
இடர் இலா முகத்தாளை, அறிந்திலையேல், இந் நின்றாள் என்னை ஈன்றாள்

குகன் :

வணங்கினென் தாயே.

(தாயர் சிவிகை ஏற, குகனும் உடன் ஏகப் பரதன் பல காவதம் காலின் கழிந்தனன்)

## காட்சி—23

இடம் : கங்கையின் 'தென் கரையில்' பரத்துவாசர் ஆசிரமம்.

இருப்போர் : பரதன், குகன், தாயர், மூவர் பரத்துவாசர்.

சுமந்திரன் மற்றும் சேனையர்.

பரதன் :

(பரத்துவாச முனிவரை நோக்கி)

—மாதவத் தோய் !

தந்தை ஆம் எனத் தாழ்ந்து வணங்கினென்.

பரத்துவாசர் :

எடுத்த மாமுடி சூடி நின்பால் இயைந்து
அடுத்த பேர் அரசு ஆண்டிலை; ஐய ! நீ,
முடித்த வார் சடைக் கற்றையை, மூசு தூசு
உடுத்து நண்ணுதற்கு உற்றுளது யாது ?

பரதன் :

'எனக்கு அடுத்தது இயம்பிலை நீ, என்ற சொல்
உனக்கு அடுப்பது அன்றால், உரவோய் !

—பின்
முறையின் நீங்கி, முது நிலம் கொள்கிலேன்;
இறைவன் கொள்கிலன் ஆம் எனின், யாண்டு எலாம்
உறைவென் கானத்து ஒருங்கு உடனே.

பரத்து :

பரத ! உரைத்த வாசகம், அரைத்த சான்று கொடு,
உள்ளம் குளிர்ந்ததால்
மேய சேனைக்கு அமைப்பென் விருந்து.
(விருந்து முடிந்ததும் –)
(தூளியின் படலையும், துரகம், தேரொடு
மூள் இருஞ் சினக் கரி முழங்கும் ஓதையும்,
ஆள் இருங் குழவினர் ஆரவாரமும்
'கோள் இரும் படை இது' என்று உணரக் கூறவே.)

## காட்சி—24

இடம் : சித்திர கூடத்தை அடுத்த குன்று.

இருப்போர் : இராமன், இலக்வன், சீதை, பரதன், வசிட்டன்
தாயர் மூவர், பரத்துவாசன், சுமந்திரன்,
முதலானோர்

இலக்குவன் :

(எழுந்தனன்; ஏறினான் குன்றின் மேல்
– கூழுந்துடை வரி சிலைக் கடலை நோக்கினான்)
(தனக்குள்)
பரதன் இப் படை கொடு பார் கொண்டவன் மறம்,
கருதி உள் கிடந்தது ஓர் கறுவு காதலால்,
விரதம் உற்று இருந்தவன் மேல் வந்தான்; இது
சரதம்; மற்று இலது.

(கட்டினன் சுரிகையும் கழலும்; பல் கணைப்
புட்டிலும், பொறுத்தனன்; கவசம் பூட்டு அமைத்து
இட்டனன்; எடுத்தனன் வரி வில்; ஏந்தலைத்
தொட்டு, அடி வணங்கி நின்று—)

இருமையும் இழந்த அப்பரதன் ஏந்து தோள்,
பருமையும், அன்னவன் படைத்த சேனையின்
பெருமையும், நின் ஒரு பின்பு வந்த என
ஒருமையும் கண்டு, இனி உவத்தி, உள்ளம் நீ.

படர் எலாம் படப் படும் பரும யானையின்
திடர் எலாம் உருட்டின, தேரும் ஈர்த்தன,
குடர் எலாம் திரைத்தன, குருதி ஆறுகள்
கடர் எலாம் மடுப்பன, பலவும் காண்டியால்.

பண் முதிர் களிற்றொடு பரந்த சேனையின்
எண் முதல் அறுத்து, நான் இமைபபின் நீக்கலால்,
விண் முதுகு உளுக்கவும், வேலை ஆடையின்
மண் முதுகு ஆற்றவும் காண்டி—வள்ளல் ! நீ.

நிவந்த வான் குருதியின் நீத்தம் நீந்தி மெய்
சிவந்த சாதகரொடு சிறு கண் கூனியும்
கவந்தமும், 'உலகமும் நின் கையது ஆயது' என்று
உவந்தன குனிப்பன காண்டி, உம்பர் போல்.

சூழி வெங் கட கரி, துரக ராசிகள்,
பாழி வன் புயத்து இகல் வயவர் பட்டு அற
வீழி வெங் குருதியால் அலைந்து வேலைகள்
ஏழும் ஒன்றாகி நின்று இரைப்பக் காண்டியால்.

ஒருமகள் காதலின் உலகை நோய் செய்த
பெருமகள் ஏவலின் பரதன் தான் பெறும்
இருநிலம் ஆள்கை விட்டு, இன்று, என ஏவலால்
அரு நரகு ஆள்வது காண்டி—ஆழியாய் !

'வையம் துறந்து வந்து அடவி வைகுதல்
எய்தியது உனக்கு' என, நின்னை ஈன்றவள்
நைதல் கண்டு உவந்தவள், நவையின் ஓங்கிய
கைகயன் மகள், விழுந்து அரற்ற—காண்டியால்.

இராமன் :

இலக்குவ! உலகம் ஓர் ஏழும் ஏழும், நீ
'கலக்குவென்' என்பது கருதினால் அது

விலக்குவது அரிது; அது விளம்பல் வேண்டுமோ?
புலக்கு உரித்து ஒரு பொருள், புகலக் கேட்டியால்;

நம்குலத்து உதித்தவர். நவையின் நீங்கினர்
எங்கு உலப்புறுவர்கள்! எண்ணின், யாவரே
தம் குலத்து ஒருவ அரும் தருமம் நீங்கினர்—
பொங்கு உலத் திரளொடும் பொருத தோளினாய்!

எனைத்து உள மறை அவை இயம்பற்பாலன,
பனைத் திரள் கரக் கரிப் பரதன் செய்கையே;
அனைத் திறம் அல்லன அல்ல; அன்னது
நினைத்திலை என் வயின் நேய நெஞ்சினால்—

'பெருமகள் என்வயின் பிறந்த காதலின்
வரும் என நினைகையும் மண்ணை என்வயின்
தரும் என நினைகையும் தவிர, 'தானையால்
பொரும்' என நினைகையும் புலமைப் பாலதோ?

பொன்னொடும், பொரு கழல் பரதன் போந்தனன்
நல் நெடும் பெரும் படை நல்கல் அன்றியே,
என்னொடும் பொரும் என இயற்பற் பாலதோ?
மின்னொடும் பொருவுற விளங்கு வேலினாய்!

சேண் உயர் தருமத்தின் தேவை, செம்மையின்
ஆணியை, அன்னது நினைக்கல் ஆகுமோ?
பூண் இயல் மொய்ம்பினாய்! போந்தது ஈண்டு எனைக்
காணிய; நீ இது பின்னும் காண்டியால்

பரதன் :

(தொலைவில் சேனையை)

பின் தருக,

இராமன் :

(இலக்குவனை நோக்கி)
இளவல்!
தொழுது உயர் கையினன்; துவண்ட மேனியன்;
அழுது அழி கண்ணினன்; 'அவலம் ஈது' என
எழுதிய படிவம் ஒத்து எய்துவான் தனை -

—முடிய நோக்குக
ஆர்ப்பு உறு வரி சிலை இளைய ஐய! நீ,
தேர்ப் பெருந்தானையால் பரதன் சீறிய
போர்ப் பெரும் கோலத்தைப் பொருந்த நோக்கு.

(—இளவல் நின்றவன்—
மல் ஒடுங்கிய புயத்தவனை வைது எழும்
சொல்லொடும் சினத்தொடும் உணர்வு சோர்தர,
வில்லொடும் கண்ணை நீர் நிலத்து வீழவே,
....பரதனும் தொழுது தோன்றினான்)

பரதன் :

அரியவ !
அறம் தனை நினைந்திலை; அருளை நீத்தனை
துறந்தனை முறைமையை!
(மலர் அடி வீழ்ந்தனன்)

இராமன் :

(புல்லினன் நின்று: அவன் புனைந்த வேடத்தைப்
பல்முறை நோக்கினான்)
அல்லலின் அழுங்கினை; ஐய! ஆளுடை
மல் உயர் தோளினான் வலியனோ?

பரதன் :

— ஐய! நின்
பிரிவு எனும் பிணியினால், என்னைப் பெற்ற அக்
கரியவள் வரம் எனும் காலனால். தனக்கு
உரிய மெய்ந் நிறுவிப் போய் உம்பரான் ;
(வானின் உம்பரான்
கண்ணொடு மனம் சுழன்று கறங்கு போல் ஆய்.
மண்ணிடை விழுந்தனன்)

இராமன் :

நந்தா விளக்கு அனைய நாயகனே! நானிலத்தோர்
தந்தாய்! தனி அறத்தின் தாயே! தயா நிலையே!
எந்தாய்! இகல் வேந்தர் ஏறே! இறந்தனையே !
அந்தோ இனி வாய்மைக்கு ஆர் உளரே மற்று?

சொல் பெற்ற நோன்பின் துறையோன் அருள் வேண்டி,
நல் பெற்ற வேள்வி நவை நீங்க நீ இயற்றி,
எற் பெற்று, நீ பெற்றது இன் உயிர் போய் நீங்கலோ?
கொல் பெற்ற வெற்றிக் கொலை பெற்ற கூர் வேலோய்?—

மன் உயிர்க்கு நல்கு உரிமை மண் பாரம் நான் சுமக்க,
பொன் உயிர்க்கும் தாரோய்!-பொறை உயிர்த்த ஆறு இதுவோ?
உன் உயிர்க்குக் கூற்றாய் உலகு ஆள உற்றேனோ?—
மின் உயிர்க்கும் தீவாய் வெயில் உயிர்க்கும் வெள்வேலோய்!

வேண்டும் திறத்தாரும் வேண்டா அரசாட்சி
பூண்டு, இவ் உலகுக்கு இடர் கொடுத்த புல்லனேன்,
மாண்டு முடிவது அல்லால், மாயா உடம்பு இது கொண்டு
ஆண்டு வருவது- இனி யார் முகத்தை நோக்கவோ?

தேன் அடைந்த சோலைத் திருநாடு கைவிட்டுக்
கான் அடைந்தேன் என்னத் தரியாது காவல! நீ
வான் அடைந்தாய், இன்னம் இருந்தேன் நான், வாழ்வு உகந்தே
ஊன் அடைந்த தெவ்வர் உயிர் அடைந்த ஒள் வேலோய்!

வண்மையும், மானமும், மேல் வானவர்க்கும் பேர்க்ககிலாத்
திண்மையும், செங்கோல் நெறியும், திறம்பாத
உண்மையும், எல்லாம் உடனே கொண்டு ஏகினையே!
தண்மை தகை மதிக்கும் ஈந்த தனிக் குடையோய்!

(மன்னவர் மந்திரியர் எல்லாரும் வந்து அடைந்தார்
சேனைத் தலைவோரும் தாம் அடைந்தார்)

வசிட்டன் :

துறத்தலும்நல் அறத் துறையும் அல்லது
புறத்து ஒரு துணை இலை, பொருந்தும் மன்னுயிர்க்கு,
'இறத்தலும் பிறத்தலும் இயற்கை' என்பதை
மறத்தியோ, மறைகளின் வரம்பு கண்ட நீ?

சீலமும், தருமமும் சிதைவு இல் செய்கையாய்!
சூலமும், திகிரியும், சொல்லும், தாங்கிய
மூலம் வந்து உதவிய மூவர்க்கு ஆயினும்
காலம் என்ற ஒரு வலை கடக்கல் ஆகுமோ?

புண்ணிய நறு நெயில், பொரு இல் காலம் ஆம்
திண்ணிய திரியினில், விதி என் தீயினில்,

எண்ணிய விளக்கு அவை இரண்டும் எஞ்சினால்.
அண்ணலே! அவிவதற்கு ஐயம் யாவதோ?

ஐய! நீ யாது ஒன்றும் அவலிப்பாய் அலை,
உய்திறம் அவற்கு இனி இதனின் ஊங்கு உண்டோ?
செய்வன வரன் முறை திருத்தி, சேந்த நின்
கையினால் ஒழுக்குதி கடன் எலாம்—

விண்ணு நீர் மொக்குளின் விளியும் யாக்கையை
எண்ணி, நீ அழுங்குதல் இழுதைப் பாலதால்,
கண்ணின் நீர் உகுத்தலின் கண்டது இல்லை, போய்
மண்ணு நீர் உகுத்தி, நீ மலர்க்கையால்—
(புக்கனன் புனலிடை, முழுகிப் போந்தனன்
தக்கனநல் மறையவன் சடங்கு காட்ட, தான்
முக்கையின் நீர்விதி முறையின் ஈந்தனன்—
ஒக்க நின்று உயிர் கொளும் உணர்வு நல்குவான்)

இராமன் :

(சீதையை நோக்கி)
நல் நெடுங் கூந்தல்—நாயகன்
என் நெடும் பிரிவினால், துஞ்சினான்.
(சீதை—
துண்ணெணும் நெஞ்சினாள், துளங்கினாள், துணைக்
கண் எனும் நெடுங்கடல் கலுழி கான்றது
தாயரின், முனிவர், தம் தருமப் பன்னியர்
தூய நீர் ஆட்டினர், துயரம் நீக்கினர்)

இராமன் :

(தாயர்தம் சேவடிச் சிந்தி)
வந்த தாயரீர்!
எந்தை யாண்டையான் இயம்புவீர்?
(தாயரும் இராமனைத் தழீஇ பின்னர் சீதையை
மார்பு உறப் புல்லினார்)

## காட்சி—25

இடம் : சித்திர கூடம்.

இருப்போர் : இராமன், இலக்குவன், பரதன், வசிட்டன், சுமந்திரன்
பரத்துவாசர், தாயர் மூவர், சீதை, சேனை.

இராமன் :

வரதன் துஞ்சினான்; வையம் ஆணையால்
சரதம் நின்னதே; மகுடம் தாங்கலாய்,
விரதவேடம், நீ என்கொல் மேவினாய்?
பரத கூறு,

பரதன் : நீ

அன்றி யாவரே அறத்து உளோர்? அதில்
பின்றுவாய் கொலாம்?
மனக்கு ஒன்றாதன வரத்தின் நின்னையும்,
நினக்கு ஒன்றா நிலை நிறுவ, நேமியான்—
தனைக் கொன்றாள் தரும் தனையன் ஆதலால்,
எனக்கு ஒன்றா, தவம் அடுப்பது எண்ணினால்.

நோவது ஆக இவ் உலகை நோய் செய்த
பாவகாரியின் பிறந்த பாவியேன்,
சாவது ஓர்கிலேன, தவம் செய்வேன் அலேன்;
யாவன் ஆகி, இப்பழி நின்று ஏறுவேன்?

பிறந்து நீயுடைப் பிரிவு இல் தொல் பதம்
துறந்து, மாதவம் தொடங்குவாய் என்றால்,
மறந்து, நீதியின் திறம்பி, வாளின் கொன்று
அறம் தின்றான் என, அரசு அது ஆள்வெனோ?
தொகைஇல் அன்பினால் இறைவன் துஞ்சநீ
புகையும் வெஞ் சுரம் புகுத, புந்தியால்
வகை இல் வஞ்சனாய் அரசு வவ்வ, யான்
பகைவனே கொலாம்? இறவு பார்க்கின்றேன்!
உந்தை தீமையும், உலகு உறாத நோய்
தந்த தீவினைத் தாய் செய் தீமையும்.
எந்தை! நீங்க, மீண்டு அரசு செய்க.

இராமன் :

(தனக்குள்)

இற்றதோ இவன் மனம்?

(பரதனை நோக்கி)

வெற்றி வீர! யான் விளம்பக் கேண்
முறையும், வாய்மையும், முயலும் நீதியும்,
அறையும் மேன்மையோடு அறனும் ஆதி ஆம்
துறையுள் யாவையும், சுருதி நால்விட
இறைவர் ஏவலால் இயைய காண்டியால்.

பரவு கேள்வியும், பழுது இல் ஞானமும்,
விரவு சீலமும், வினையின் மேன்மையும்,
உரவிலோய்!—தொழற்கு உரிய தேவரும்
'குரவரே' எனப் பெரிது கோடியால்.

அந்த நல் பெருங் குரவர் ஆர் எனச்
சிந்தை தேர்வுறத் தெரிய நோக்கினால்
'தந்தை தாயர் என்று இவர்கள் தாம் அலால்,
எந்தை! கூற வேறு எவரும் இல்லையால்.

தாய் வரம் கொள தந்தை ஏவலால்.
மேய நம் குலத் தருமம் மேவினேன்;
நீ வரம் கொளத் தவிர்தல் நேர்மையோ?—
ஆய்வு அரும் புலத்து அறிவு மேவினோய்!

தனையர் ஆயினார் தந்தை தாயரை
வினையின் நல்லது ஓர் இசையை வேய்தலோ?
நினையல் ஓவிடா நெடிய வன்பழி
புனைதலோ?—ஐய! புதல்வர் ஆதல்தான்.

இம்மை, பொய் உரைத்து, இவறி எந்தையார்
அம்மையா வெம்மை சேர் நரகம் ஆள யான்,
கொம்மை வெம்முலைக் குவையின் வைகி வாழ்
செம்மை சேர் நிலத்து அரசு செய்வெனோ?

வரன் நில் உந்தை சொல் மரபினால், உடைத்
தரணி நின்னது என்று இயைந்த தன்மையால்,
உரனின் நீ பிறந்து உரிமை ஆதலால்,
அரசு நின்னதே; ஆள்க.

பரதன் :

முன்னர் வந்து உதித்து, உலகம் மூன்றிலும்
நின்னை ஒப்பு இலா நீ பிறந்த பார்

என்னது ஆகில், யான் இன்று தந்தனென்;
மன்ன ! போந்து நீ மகுடம் சூடு.

மலங்கி வையகம் வருந்தி வைக, நீ
உலம் கொள் தோள் உனக்கு உறுவ செய்தியோ '?
கலங்குறாவண்ணம் காத்தி போந்து.

இராமன் :

பசைந்த சிந்தை நீ பரிவின் வையம் என்
வசம் செய்தால், அது முறைமையோ ? வசைக்கு
அசைந்த எந்தையார் அருள, அன்று நான்
இசைந்த ஆண்டு எலாம் இன்றொடு ஏறுமோ ?

எந்தை ஏவ, ஆண்டு ஏழொடு ஏழ் எனா
வந்த காலம் நான் வனத்துள் வைக, நீ
தந்த பாரகம் தன்னை: மெய்ம்மையால்
அந்த நாள் எலாம் ஆள், என் ஆணையால்.

மன்னவன் இருக்கவேயும், 'மணி அணி மகுடம் சூடுக!
என்ன, யான் இயைந்தது அன்னான் ஏயது மறுக்க அஞ்சி;
அன்னது நினைந்தும், நீ என் ஆணையை மறுக்கலாமோ ?
சொன்னது செய்தி; 'ஐய' துயர் உழந்து அயரல்—

வசிட்டன் :

(உரைக்கலுற்ற பரதனை விலக்கி நோக்கி)
வள்ளியோய்! கேட்டி.

கிளர் அகன் புனலுள் நின்று, அரி, ஓர் கேழல் ஆய்
இளை எனும் திருவினை ஏந்தினான் அரோ—
உளைவு அரும் பெருமை ஓர் எயிற்றின் உள்புரை
வளர் இளம் பிறையிடை மறுவின் தோன்றவே.

நீ அன்று அவன் உலகினை அளிக்க ஆகியது,
உன் தனிக் குலம்; முதல் உள்ள வேந்தர்கள்.
இன்று அளவினும் முறை இகந்துளார் இலை
ஒன்று உளது உரை இனம்; உணரக் கேட்டியால்,

"இத இயல் இயற்றிய குரவர் யாரினும்,
மத இயல் களிற்றினாய் ! மறுஇல் விஞ்சைகள்
பதவிய இருமையும் பயக்க, பண்பினால்
உதவிய ஒருவனே' உயரும்

என்றலால, யான் உனை எடுத்து விஞ்சைகள்,
ஒன்று அலாதன பல உதவிற்று உண்மையால்,
"அன்று" எனாது. இன்று எனது ஆணை; ஐய! நீ
நன்று போந்து அளி, உனக்கு உரிய நாடு.

இராமன்

ஆறிய சிந்தனை அறிஞ! ஒன்று உரை
கூறுவது உளது.
சான்றவர் ஆக; தன் குரவர் ஆக; தாய்
போன்றவர் ஆக; மெய்ப்புதல்வர் ஆக; தான்—
தேன் தரு மலருளான் சிறுவ! 'செய்வென்' என்று
ஏன்றபின் அவ்வுரை மறுக்கும் ஈட்டதோ?

தாய் பணித்து உவந்தன, தந்தை 'செய்க' என
ஏய எப்பொருள்களும் இறைஞ்சி மேல் கொளாத்
தீய அப்புலையனின் செய்கை தேர்கிலா
நாய் எனத் திரிவது நல்லது அல்லதோ?

முன் உறப் பணித்தவர் மொழியை யான் என
சென்னியில் கொண்டு 'அது செய்வென்' என்றதன்
பின்னுறப் பணித்தனை; பெருமையோய்! எனக்கு
என் இனிச் செய்வகை? உரை செய் ஈங்கு.

வசிட்டன் :

உரைப்பது ஓர் முறைமை கண்டிலெம் இனி

பரதன் :

அனையதேல் ஆள்பவர் ஆள்க நாடு ; நான்
பனிபடர் காடு உடன்படர்தல் மெய்

தேவர்கள் :

(போந்து) ஏத்த அரும் பெருங் குணத்து இராமன் இவ் வழிப்
போத்தரும், தாதை சொல் புரக்கும் பூட்சியான்
ஆத்த ஆண்டு ஏழினொடு ஏழும் அந் நிலம்
காத்தல் உன் கடன்; இவை கடமை.

இராமன் :

—மறுக்கற் பாலது அன்று;
யான் உனை இரந்தனென்; இனி என் ஆணையால்

ஆனது ஓர் அமைதியின் அறுத்தி, பார்
(அவன் துணை மலர்த் தடக்கை பற்றினான்)

பரதன் :

ஆம் எனில், ஏழி இரண்டு ஆண்டில் ஐய! நீ
நாம நீர் நெடு நகர் நண்ணி, நானிலம்
கோமுறை புரிகிலை என்னின் கூர் எரி
சாம் இது சரதம்; நின் ஆணை சாற்றினேன்.

இராமன் :

(அன்பினன் உருகினன்)
நின் துணிவை நோக்கினேன்—
அன்னது ஆக.

பரதன் :

(விம்மி)
தன் புகழ் தன்னினும் பெரிய தன்மையாய்!
எம்மையும் தருவன—
செம்மையின் திருவடித்தலம் தந்தீக.

இராமன் :

இரண்டும் நல்கினேன்

பரதன் :

(அழுது)
முடித்தலம் இவை - முறையின் சூடினேன்.
(அடித்தலம் இரண்டையும், அழுத கண்ணினான்,
'முடித்தலம் இவை' என, முறையின் சூடினான்;
படித்தலத்து இறைஞ்சினன். பரதன் போயினான்

பாதுகம் தலைக்கொடு, பரதன் பைம்புனல்
மோது கங்கையின் கரை கடந்து முந்தினான்;
போது உகும் கடி பொழில் அயோத்தி புக்கிலன்;

ஓது கங்குலில் நெடிது உறக்கம் நீங்கினான்—
என் இல் சுற்றமும் குழுவோடு தவத்துளோர்களும்.
சேனையும், முனியும் குகனும் போயினர்

நந்தியம் பதியிடை, நாதன் பாதுகம்
செந்தனிக் கோல் முறை செலுத்த, சிந்தையான்
இந்திரியங்களை அவித்து இருத்தல் மேவினான்,
அந்தியும் பகலும் நீர் அறாத கண்ணினான்

குன்றினில் இருந்தனன் என்னும் கொள்கையால்
நின்றவர் நலிவரால் நேயத்தால் - எனா.
தன்துணைத் தம்பியும் தானும் தையலும்,
தென்திசை நெறியினைச் சேறல் மேயினான்)

நிறைவு —

